ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

வடவேங்கட

# நாராயணசதகம்.

மூலமும்-உரையும்.

—(*)—

இஃது

திவ்விய கவி

நாராயணதாசரவர்கள்

இயற்றியது






ஆதிபுரி

இரத்தினவேலுமுதலியாரது

வாணீவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

௧௯௧௩.

இதன் விலை அணா - ௨

சென்னை நாராயணமுதலிவீதி-௫௨-வது-வீடு

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம.

வடவேங்கட.

# நாராயணசதகம்

மூலமும் - உரையும்.

---

## பாயிரம்.

நேரிசைவெண்பா.

நஞ்சுவினைக் காமமுத னமதுயி ரைக்காக்கும்
செஞ்சொல்லினோர்சதகஞ் செப்பியது-விஞ்சுபுகழ்
நாராயணதாசர் நன்றாகஞானிலத்தே
பாராயணஞ்செய்பவர்க்கு.

(இ-ள்) மிகுந்த புகழுடைய நாராயணதாசரென்பவர் செஞ்சொற்களினாலேதிருவாய் மலர்ந்தருளிய நாராயணசதகமென்னும்பாமாலையானதுஇந்தப் பூமியினிடத்தில் அன்போடுபாராயணஞ் செய்பவர்களாகியநமக்கு நம்முடையஊழ்வினையையழிக்கும்விஷமாகும், நம்முடைய உயிரைக்காக்கும்அமுதமாகும்.

## காப்பு.

நேரிசை வெண்பா

நல்லவடவேங்கடத்து நாராயணசதகம்
சொல்லவெனக்குத் துணையாமே மல்லர்
பணையானதிண்புயத்துப் பாண்டவர்க்குமுன்னந்
துணையானபாதந் துணை.

(இ-ள்) அழகிய வடக்கின்கணுள்ள திருவேங்கடத்தி லெழுந்தருளிய ஸ்ரீமந்நாராயணன்விஷயமாகஒர் சதகமென்றும் பாமாலை பாடுகிற தற்குப்பல

ம்பொருந்திய பருத்ததாகிய அழுத்த புஷ்பங்
களைப்படைத்தபாண்டவர்க்குமுற்காலத்திலதுணை
யாயிருந்த அவருடையபாதங்கள் துணையாயிருப்
பதுமன்றிஎன்னுயிக்கும்அவைகளே துணையாகும்.

நூல்.

கலி விருத்தம்.

பிரிந்திசைவண்ணம்.

நீர்கொண்டுதன்மலர்கொண்டு நன்னெறிகொண்
டுநின்குறிகொண்டுவன், சீர்கொண்டுவந் தனைசெய்
துச் செறிவார்களென்பெறுவார்களோ, பேர்கொ
ண்டிலன், பொறிகொண்டிலன் பெரியோர்களா
ருள்கொண்டிலன், நார்கொண்டுகண்டருள்சோதி
யே நாராயணாநாராயணா.

(இ-ள்) பரிசுத்தமான தீர்த்தங்களையுங்குளிர்ச்சி
பொருந்திய புட்பங்களையுங்கொண்டுநன்மார்க்கத்
தையறிந்துதேவரீருடையசொரூபத்தைத்தெரிந்து
அழகியஞானத்தைப்பொருந்தித்தண்டன்சமர்ப்பி
த்து உம்மை ஆராதனைசெய்துஅடைந்தபேர்களெ
ல்லாம் என்னபலனைப்பெறுவார்களோ அறிகிலே
ன் நாயினேன்தாகியநாம முதலிய பஞ்சசம்ஸ்கார
த்தையும் பாகவதராலேகிருபையுங்கொண்டவனே
அல்ல ஆதலால் அனபுகூர்ந்துசங்கோஷித்து இரட்
சித்தருளவேண்டுமசோதி மயமாகிய ஸ்ரீமந்நாரா
யணா-எ-று.

பரகாரியம் பலசெய்துனைப் பணியாமலேபிணி
யானபின், விரகாயிருந்தழுதாவதென் வெறியார்கு
ணங்குறியார்களோ,உரகாரிமேலுபகாரியாயொரு
சாரியாவுலவாரியா, நாகாரியேமுரகாரியேநாரா
யணாநாராயணா.

(இ-ள்.) கொலை, களவு, காமம்,பொய், வஞ்சனை
இவைமுதலாகிய அநேக துஷ்டகிருத்தியங்களைச்

செய்து தேவரீரைப்பணியாமல் பிணியானது சம்ப
வித்தபிற்பாடுங்கபடமாயிருந்து அழுததினாலே உ
ண்டாகியகாரியம்ஒன்றுமில்லை ஆதலாலப்பிரதிபக
காரக்குணங்களை நல்லோர்களையறிந்து இரட்சிப்ப
துகடன அத்தன்மைபோல அடியேனை இரட்சிப்ப
துஉமக்கே கடன் சர்ப்பங்களுக்குப்பகையாகியக
ருடவாகனமீதிலெழுந்தருளி அடியார்களுக்குபகா
ரமாக ஒப்பில்லாத சேவையாய்உலாவிவந்தருளா
நின்ற ஐயனே நரகாசுரனுக்கும் முராகாசுரனுக்கும்
வைரியாகிய ஸ்ரீமந்நாராயணா-எ-று.

சிவனீதலம் புயனீதலந்திரனீதல்சந்திரனீகலா,த
வனீதலவில்லணவரீதன்மாதவரீதலோடெவர்தமு
ம் அவனீதலந்தனிலெண்ணினுன்னடியார்தம் பொ
டியாகுமேகவர்ணமுகமேகமேநாராயணா நாராய

(இ-ள்) சிவனும் பிர்மாவும்இந்திரனும் சந்திர
ப்சூரியனும்தேவர்களும்ரிஷிகளும்இவர்களுடனே
கூடபின்னும யாவர்களுங் கொடுக்காநின்ற பலன்
களையெல்லாம்பூதலத்திலே எண்ணிப பார்க்குமிட
த்தில் தேவரீருடைய அடியார்கள் திருவடித்தூளு
ம்ஒப்பாகமாட்டாது ஆதலால் அவர்களைநினைப்ப
தேயில்லை கோபாலர்கிரகத்திலேவெண்ணெயையு
ண்டருளும்நீலமேகவண்ணனாகிய ஸ்ரீமந்நாராயணா.

அலைசத்தரும் பிணிவந்துநானலையாமலேயமரர்க்
கிடுந்,மலைசதத்துமேளார் துனிநலகியென்கவியைக்கொ
ளாய்கருணாகரா, குலசக்கரன் சலசேகரன்குலசே
கரன்புகழ்சாகரா, கலசக்கராசலசக்கராநாராயணா
நாராயணா

(இ-ள்) தேகமானது வருத்தத்தையடையும்படி
யானநோய்வந்து அடியேன்கலையாமலிருக்கதேவர்
களுக்குக் கொடுத்தருளாநின்ற கலைத் தமிழ்த்
திலே ஒருதுளிகட்டாட்சித்தருளி அடியேனுடைய

கவிகையைக்கைக்கொள்ள வேணுங் கருணைத்திரு
மேனியனே வச்சிரபாணியுங்கங்காதரனுக்குலசே
காராகிய ஆழ்வாரும்தோத்திரம்பண்ணுகின்ற சீர்
த்தியாகிய சமுத்திரத்தையும் நல்ல சக்கரத்தையும்
தாமரைமலர்போன்ற திருக்கரங்களையும் உடைத்
தாகிய ஸ்ரீமந்நாராயணா-எ-று.

எதிரும் பெரும் பிணியும்பரந் திரையுஞ்செறிந்
தழிதலும்பலந்,ததிரந்திரிந்துடலங்கொளுந்துயரந்
தெளிந்துணைநம்பவா, மதிமயங்கிடந் தொளிருஞ்ச
டா மகுடந்தொறுந்தொளியும்பவா,ன திவந்தொழு
ம பதபங்கயா நாராயணா நாராயணா.

(இ-ள்)தேகத்திலே எதிர்ந்துவாராநின்றபெரிதாகி
யநோய்மிகுந்து இரைப்புநெருங்கி அறுகுதலைந்து
உதிரமுறிந்துகொள்ளாநின்றதுக்கமானது.தெளிந்
துபோய்த்தேவரீரை அடியேன்நம்பும்படியாகப்பி
ரசன்னமாகவேண்டும் சந்திரன்வாசமாய்ப் பிரகா
சியாநின்றசிவனுடையசடாமகுடந்தோறும்முழுக்
கம்நிறைந்திட ஆகாயகங்கையானது வந்தணைநின்
றதிருவடி தாமரைகளையுடைத்தாகிய ஸ்ரீமந்நாராயணா
எல்லாருமுன்னுகாத்தருளெயென்றேடுமங்குறை
கின்றபேர், அல்லாதுவேறில்லையையாலனைவர்க்கு
மோரருளல்லவே, வல்லாருளார் மாட்டாருளா
வறியாருளார் வாழ்வாருளார் நல்லாருளார்பொல்
லாருளாரா நாராயணா நாராயணா.

(இ-ள்) அடியேனுடைய ஆத்மகோடிகளெல்லாந்
தேவரீருடையகுட்சிக்குள்ளே வாசம்பண்ணுகிறதே
யல்லாமல் வேறேயிடமில்லை யாதலால் யாவருக்கு
ஞ்சமானமான கிருபையேயன்றிப் பேதமில்லையே
அத்தன்மையாயிருக்க இதிலே வலியரென்றும்மெலி
யரென்றும்வாழ்வின ரென்றும் நல்லவ ரென்றும்
பொல்லாதவரென்றும உண்டாகிய தென்னமாய
மோ ஸ்ரீமந்நாராயணா

நீகாசதா நீதூசதா நீயாடுகா நீமாடுதா, போகா தேபோர்க் கிடுசோறெனப்புலையர்க்கு நெஞ்சநுகச் சொன்னேன் ஆகாதகாரியமென்னிடக் கஜாவற்றதாண்டவையாய்வையோ, நாகாசலாநாகாலயா நாராயணா நாராயணா.

(இ-ள்) பணம் வஸ்திரம் ஆபரணஞ்சாதமுதலியவைகளைநீங்கள்கொடுங்களென்றுசொல்லுவதற்குயோக்கியமில்லாத போர்களாகிய மிலேச்சருடையநெஞ்சானது உருகும்படியாய்க் கவிதைபாடிக் கேட்டுக்கொண்டபொல்லாதகாரியங்கள்கணக்கில்லாமலடியேனிடத்திலிருக்கின்றன அவைகளை ஆராய்ந்துபாராமல் இரட்சிக்கவேண்டுஞ்சோலைமலையிலு நம்சேஷகிரியுங் கோவிலையும்பெற்ற ஸ்ரீமந்நாராயணா

அயனெழுத் தளவன்றியேயதிகங்கனைப்பெறாதுதாயினும், பனையேறுப பவரில்லைப் படிமீதிலப்படியன்றியே, வியனூனைத்தொருவர்களவிதிவெல்வராய் மறைசொல்லுமே, நயனாதன்புகழ்சோதியே நாராயணா நாராயணா.

(இ-ள்) பிரமதேவனானவன் எழுதினபிரகாரமே அல்லாமல் அதிகமாக கூழைப்பேராகிலும்இந்தப்பூமியிலே பிரயோசனப்பட்டிருக்கிறவரில்லையென்றாலும்அப்படி அல்லவென்று சந்தோஷமாகதேவரீரைத் தொழுதபோர்களெல்லாமந்தவிதிவசத்தைக்கடந்திருப்பார்களென்றுவேதங்கள்முறையிடுகின்றதேநயத்தோடுங்கூடியநாரதமகாமுனிவர்தோத்திரம்பண்ணுகின்றசோதிமயமாகிய ஸ்ரீமந்நாராயணா

ஓமங்களால் விரதங்களா லுயர்தீர்த்தயாத்திரைகோடியால், ஏமங்கள்கன்னியர்களொடெழுபானையுஞ்சூழ்கின்றதால் ஆமைம்புலன்கடிகின்றதாலடைபுண்ணியங்களனேகநின், நாமம்புகன்றதையோலுமோ நாராயணா நாராயணா

(இ-ள்) ஓமங்களாலேயும் விரதங்களாலேயுமுபர்
ச்சிபெற்ற கோடிதீர்த்தயாத்திரைகளாலேயுஞ்சுவ
ர்ணங்களுடனே கன்னிகாதானங்களாலேயுமேழு
பூமியையும்பிரதட்சணம் வந்ததினாலேயும் உண்டா
கிய பஞ்சவிந்திரியங்களை நீக்கினதினாலேயும் வராநி
ன்ற புண்ணியங்களெல்லாம் தேவரீருடைய திருநா
மத்தைக்ஷணப் போதாகிலுஞ்சொல்லிய புண்ணிய
த்திற்கீடாகமாட்டாது ஸ்ரீமந்நாராயணா-எ-று.

பாடேனோகவிசித்தனைப் பணிவேனோபல
காலெழுந்தாடேனோபலி பீடமுன்னேகனோ
சடகோபமுடிமேசூடேனோவலமாகவேசுழலேன
னோகதியென்றுனைநாடேனோகொடியேனோ
நாராயணா நாராயணா.

(இ-ள்.) தேவரீரைக் கவிதைகளாலே பாடினது
மில்லை, தண்டன்சமர்பிக்கிறதுமில்லை, பலகாலுமெ
ழுந்தாடினதுமில்லை, பலிபீடத்தின்முன்னேவந்த
தில்லை, சடகோபத்தை முடியிலேசூடினதுமில்லை
கதியொன்றுநினைத்ததுமில்லை, இத்தன்மையானபா
வியானவன்கடைத்தேறுமார்க்கமுண்டோ ஸ்ரீமந
நாராயணா-எ-று. ௰

அறவைக்கெலாமடிமூலநானருக்கெலாமடிமூ
லநீ, பிறருக்கெலாம் பெறுவித்ததும்பெறுவிப்பது
ம் பிணைதட்டிலே, உறவைக்கிலென்னுயிர்காவலுக்
கொவ்வாதுவா துரைசெய்வனோ, நறைவைத்துழா
யணிமார்பனே நாராயணா நாராயணா.

(இ-ள்)லோகங்களுக்கெல்லாம் அடிவேராகியிரு
ப்பதுயானேயன்றிவேறில்லைகிருபைகளுக்கெல்லா
ம் மூலகாரணமாகியிருப்பது தேவரீரையன்றிவே
றில்லை அயலார்களுக்கு நீசெய்தபலனையும்இனிச்செ
ய்கின்ற பலனையுந்தராசினுடையதட்டினிலேபொ
ருந்தவைத்தாலென்னுடைய உயிரைஇரட்சிக்கிறப

லனுக்கு அவை சரியாக மாட்டாது ஆதலால்வாது
பேசுவதில்லை தேன்பொருந்துந்திருத்துளவுந்தரித்
த திருமார்பை யுடைத்தாகிய ஸ்ரீமந்நாராயணா.

பசியாதமந்திரமே வரும் பழியாத மந்திரமந்த
ரன்,விசியாதமந்திரகோயிலேவிழியாதமந்திரநெஞ்
சிலே,முசியாதமந்திரமோதுவார் முதலானமந்திர
மொன்றிலே நசியாதமந் திரமோநமோ நாராயணா
நாராயணா.

(இ-ள்)பசியையெழுப்பாதது எவர்களாலேயும்
பழுப்பில்லாதது யமன்பாசத்திற் கட்டுப்படாதது
நோயைப்பார்க்காதது நெஞ்சலிலே கெடுதலில்லா
தது ஓதுவார்க்கெல்லா முதன்மையாயதுஒன்றிணு
லேயும்நாசமில்லாதது அவையாதெனில் ஓம்நமோ
நாராயணாவென்னுதிருமந்திரமேயல்லடிவேறில்லை
ஸ்ரீமந்நாராயணா-எ-று.

அபராதமாகியபலசரக்கடலாகவோடமேற்றி
யேவிபரீதநோ யலையிற்குளே விடநின்றதாழ்வினை
யென்செய்வேன்,இபராசனைக்கரையேற்றுநீசியனை
யேற்றலிங்கரிதல்லவே, நபராசனே சுபராசனே
நாராயணா நாராயணா.

(இ-ள்) அபராதங்களாகியபலசரக்குகளைநெருக்
கமாத்தேகமென்னும்ஓடத்திலேயேற்றிவிபரீதநோ
யாகியகடலுக்குள்ளே ஊழ்வினை யானது தள்ளுகி
ன்றதனென்செய்வேன்கஜேந்திரனைக்கரையேற்றின
தேவரீர்அடியேனைக்கரையேற்றுதற்குஇவ்விடத்தி
ல் அரிதல்லவேவேர்களுக்குஞ் சுபங்களுக்குங் கர்
த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணா

வான்சொல்லுமே புவிசொல்லுமே மறைசொல்
லுமே நிறைசேடன்வாய், தான்சொல்லுமேமுனி
வோர்பெருஞ் சபைசொல்லுமே சசிசொல்லுமே.
தேன்சொல்லிபங் கிறைசொல்லுமேதிசைசொல்லு

மேதினையாமலேனான் சொல்லவேதாவுமாவனே
நாராயணா நாராயணா

(இ-ள்) தேவர்களுடைய நாவும் உலகத்தோரு
டையநாவும், வேதங்களுடையநாவும் கல்விநிறைந்
தஆதிசேடனுடையஇரண்டாயிரநாவும், பெரிதாகி
யசபையோடுங்கூடியமுனிவருடையநாவும், சந்திர
ன் முதலாகியநவக்கிரகங்களுடையநாவும்தேன்போ
லுஞ்சொல்லினையுடைய பார்வதிபாகத்திலிருக்கும்
ருத்திரனுடையநாவும், திக்குப்பாலகருடையநாவு
ம்தோத்திரிக்கும்படியான தேவரீருடைய கீர்த்தி
யை மாறுபடாமல்அடியேனுடையநாவினாலேசொ
ல்வதற்குக் காரணமாவேனேசொல்லும் ஸ்ரீமந்நா
ராயணா-எ-று.

சுருக்காமருந்துடற்கூறியேசுழற்றுமருந்தழற்றீ
யிலே,உருக்காமருந்துலர்த்துண்டையாவருட்டாம
ருந் துழக்கெண்ணெயில், சுருக்காகமருந்திதற்கை
யிலேநசக்காமருந்திருக்கல்லிலே, நருக்காமருந்தி
ருக்கின்றதே நாராயணா நாராயணா.

(இ-ள்) வெயிலிலே சுருங்காததுஉடலிலேபூரிஞ
ற்சுழற்றாதது அக்கினியிலே யுருக்காதது உண்டை
யாகவுருட்டி உலர்த்தாததுஉழக்கெண்ணெயிலேசு
ருக்காததுவலியகைகளிலே கசக்காதது இரண்டுக
ல்லே நருக்காதது இத்தன்மையைக் கொண்டமரு
ந்தானது இருக்கின்றது அதுபாதெனில்அஷ்டாட்
சரமேயன்றி வேறில்லைஸ்ரீமந்நாராயணா.

தகவாயுனைப்புகழாமலேசலமேமெதாடுத்திகல்
பேசுவார், முகவாயிலேபுழுவீழுமே முனையத்தகன்
கிளைபோதுமே,சுகவாசனை மிகுமோகனை கனகங்க
ளேபரமர்பெலாம்,நகவாலினாலரிசியமேநாராயணா
நாராயணா.

(இ-ள், மேன்மையாகத்தேவரீரைத்தோத்திரஞ்
செய்யாமல் கோபமேபொருந்திப்பகையாகஇழிவு

பேசுவாருடைய முகத்தோடுங்கூடிய வாய்களிலே
புழுக்கள்சொரிவதுமல்லாமல் எதிர்க்காநின்ற யம
தூதர்போலாவார்கள் கருடவாகனனேமேகசொரூ
பனே இரணியனுடையமார்பையும் அவனதுசேனை
களையும் நகமென்னும ஆயுதத்திலே சங்கரியாநின்
ற நரசிங்க ரூபமாகியஸ்ரீமந்நாராயணா-எ-று.

தலமேழையும் படமோதினுஞ்சலமொவிடா
லகிலாண்டநற்பலம்யாவுமென்மனைசேரினும்பசை
போதிடாதினைமாதரார்குலம்யாவுநின்பந்தியினு
க்குறாதுமால்பெறுகாயமே, கலமேவுமேமொபால
மேவுமேமநாராயணா நாராயணா.

(இ-ள்) ஏழு லோகத்தையும் அழியும்படியாய்ப்
போர்பண்ணினாலுங் கோபங்களடங்குவதில்லை அகி
லாண்டங்களிலேயிராநின்ற நன்மையான பாக்கிய
ங்களெல்லாம் என்வீட்டிலே நிறைந்தாலும் ஆசை
களொழிவதில்லைபெண்களென்றிறைந்த சாதிகளெ
ல்லாம் இன்பத்தைக்கொடுத்தாலுங் காமங்கள்நீங்
குவதில்லை இத்தன்மையைக்கொண்டு என்னுடைய
தேகமானது எந்தத்தன்மையைப் பெறுமோ அறி
யகில்லேன் பிரகாசியாநின்றமேகவர்ணனாகியஸ்ரீ
மந்நாராயணா-எ-று.

பண்டிட்டதாமரைப்புந்தியிற்படிவார்நினக்கடி
யாரெனத்,தொண்டிட்டுன்றொழில்கொள்வதோ
துயரத்திலேயடைவிப்பதோ, கொண்டிட்டநின்பு
கழ்நிற்கவேகுறையாளரைப் புகழ்கின்றவாய், நண்
டிட்டபாழ்வலையொக்குமே நாராயணா நாராயணா.

(இ-ள்) பழமையாயிராநின்ற தேவரீருடையநா
பிக்கமலத்திலே பொருந்தின உயிர்களையெல்லாம்
அன்பராகும்படி அடிமைகொண்டுகயிங்கரியத்தை
க்கொள்ளவேண்டுமேயல்லாமல் துக்கங்களடைய
ச் செய்யலாமோ வேதங்கள்கொண்டிராநின்றஉம்

முடைய கீர்த்தியைவிட்டுக்குறைச்சலானதெய்வங்களைப்புகழாநின்றவாய்களெல்லாம்நண்டிட்டுதோண்டியிட்ட பாழ்வளைக்கு ஒப்பாவதே யன்றிப்பிரயோசனமில்லை ஸ்ரீமந்நாராயணா-எ-று. கரு

மங்கையானவன் பிணிசெய்ததோர்பதினையிரம்பிணியுண்டிநான்மங்கையாயினக்குரை செய்கிலேன்வருநோய்புகின் னாநனாகலால், மங்கையானபின்முறையிட்டனன்விடுவித்திடாய்வினையாடினால், நங்கையாநகேளாதமைகபார்தமோ நாராயணா நாராயணா

(இ-ள்) அடியேனுடையதேகத்திலேபசையப்பொல்லாத பிணியானது செய்யாநின்றவுபத்திரவங்கள்பதினாயிரமுண்டு இன்னவிதங்களென்று தேவரீருக்குவிண்ணப்பஞ்செய்கிலேன்வராநின்ற இந்த நோயானது உமதுகிருபையேயல்லாமல்வேறில்லை ஆதலால்தான்மம்வந்தபிற்பாடுமுறையிட்டேன் இதை நீக்கிவிடாமல்விளையாடினால் உலகத்தார் நகைப்பதுமல்லாமல் இகழ்ச்சியும் பண்ணுவார்கள் ஸ்ரீமந்நாராயணா-எ-று

குப்புற்றகன் றடனைவலாங் குழுவாகவோர்குழலூதவே, மப்புக்கொழுந்தொனிசாதிவை வழிமேயக்குடுட்களுமுண்ணவே, துப்புக்குமோர்தயிர்வெண்ணெய்பால், சொரிகைக்குமவ் விடைநங்கைமார், நட்புக்குமாடியகண்ணனே நாராயணா நாராயணா.

இ-ள். கன்றுகளுடனே பசுக்களெல்லாங் குவிந்திருக்கவும ஆகாய வழியிலே சொல்லாநின்றபட்சிகளுடைய காதுகளிலே கேட்கவும்ஒப்பில்லாதவேணுகுழலூதித் தொனியாகமப்புக்கொட்டினதுமல்லாமல் அங்கிருக்கும் இடைப்பெண்கள் பொழியாநின்றநெய்க்கும், மோருக்கும், தயிருக்கும்வெண்ணெய்க்கும்பாலுக்கும் அவர்களுடையநட்பினுக்கும் நடனஞ்செய்தகண்ணனாகிய ஸ்ரீமந்நாராயணா-எ-று, உ௰

தாயிற்றபேர் தாயாகுவாய் தமரிற்றபேர் தமரா
குவாய், சேயிற்றபோர் சேயாகுவாய்செயலிற்றபே
ர்செயலாகுவாய், வாயிற்றபேர் வாயாகுவாய் மலை
போலுநோய்க்குனைநம்பினோ, நாயிற்றுமுன் பணி
நீறாகுமோநாராயணா நாராயணா

(இ-ள்) தாயில்லாதபேர்களுக்குத் தாயாகவும், சு
ற்றமில்லாதபேர்களுக்குச்சுற்றமாகவும், பிள்ளையி
ல்லாதபேர்களுக்குப் பிள்ளையாகவும், உதவியில்
லாதபேர்களுக்கு உதவியாகவும், வாக்கில்லாதபே
ர்களுக்கு வாக்காகவும், அருளாநின்றதேவரீரை அ
டியேன் மலைபோலுங்கொண்டநோக்கு நம்பினால்
சூரியனுமுன்னே பனிநீங்குமாப்போலேயன்றிற்
குமோ ஸ்ரீமந்நாராயணா எ-று. உக

மந்தன்புதன்குருவெள்ளி செய்மதிராகு கேதரி
நாடோறுந, தந்தமபொலா விடமேவினுஞ்சகலரை
நின்சரணென்றனனைத்தம்பிரானிவனென்றுகொண்
டேசாதசபாலனிலரே, நந்தன்சுதா நமபுமபதா
நாராயணாநாராயணா

(இ-ள்) சனிபுதன் குருசுக்கிரன் செவ்வாய்சந்தி
ரன்ராகுகேது சூரியன் இவர்கள் நாடோறுந்தங்க
ளுக்குகளபொல்லாத இராசிகளிலே யிருந்தாலும
சகலத்துக்குமசரனே தேவரீருடைய திருவடியை
அடைந்தவனெங்களுடைய சமபிரான்இவனேயென
று அன்புகொண்டு பகிரோரா படித்தப பலனைச்
சொடபாராசன நந்தகோபனுடைய திருக்குமரா
னாயினோன் நமமாநின்ற பரமபதத்தை யுடைத்தா
கிய ஸ்ரீமந்நாராயணா-எ-று. உஉ

ஆற்றுமையொன றமையாமை யொன் றறியா
மை யொன்றருளாமையொன், றேற்றுமையொன்
றிசையாமையொன் றின்றுமையொன்றிருகாளையு
ம, போற்றுமையொன் றடியாருடன் பொசியா

ளியேறுமே, தானோரை யண்டினபேர்கடா ரடி யாருளத்தானந்தமே, நானோதவா ஞானோதயா நாராயணா நாராயணா.

(இ-ள்) மகத்தாகிய நோய்களெல்லாந் தேவரீருடையகிருபையைப் பெற்றநாளையிலே உமிழ்நீரே மருந்தாகி அங்ஙனே ஓடிப்போகும் உமதுகருணையில்லாத காலத்திலே சஞ்சீவியைக் கொடுத்தாலுந் தள்ளிவிட்டு அதிகமாகுமாதலா லிந்தயநிந்தபேர்களை அடைந்தபேர்கள் சுகத்தைப் பெறுவார்கள் அடியார்கள் இருதயத்தில் ஆனந்தமானவனே நாயினேன் தோத்திரம் பண்ணினால் ஞானஉதயஞ் செய்தருளவேண்டும்ஸ்ரீமந்நாராயணனே-று.

ஈசன் பரன் பிரமன் பிதாவிறைவிண்டுவண்டுறை தண்டுழாய், வாசன்சராசரனென்றுநின் வழியன்பர்வாழ்பதி தன்னிலே, தீசங்கடம் பிணிதாழுமே சிறைசண்டை வஞ்சனைவீழுமே, நாசங்கடந்துயிர் வாழுமே நாராயணாநாராயணா.

(இ-ள்) ருத்திரனுக்கு பரமனேயென்றும் பிரமனுக்குத் தந்தையேயென்றும், கர்த்தனேயென்றும்விஷ்ணுவேயென்றும், வண்டுகளுடனே குளிர்ச்சி பொருந்தாநின்ற திருத்துழாயினிடத்தில் வாசனேயென்றுஞ் சராசரங்களானவனேயென்றுந் தேவரீரைத் தோத்திரம்பண்ணி வழிபடாநின்றஅடியவர்கள் வாழ்ந்தருளுந்தலங்களிலே பொல்லாதசங்கடங்களும் நோய்களும்சிறைகளும் போர்களும் வஞ்சனைகளும்இவைமுதற்குற்றங்கள்யாவும்நீங்கி மற்றவுயிர்களெல்லாம் வாழ்ந்திருக்கும்ஸ்ரீமந்நாராயணா

ஆபாதவா யுனைவாயுமே யடியாருடன் படைபண்ணுமே, மாபாவநூல்பலகற்குமே மறைபண்ணுவாதியர்தம்மினும், ஓபாவியேனிவை நின்முனேயுரைசெய்தனன்விரைசெய்தபூ, நாபாபராபரனேயரீ நாராயணா நாராயணா

(இ-ள்) அபத்தம்நிறைந்த என்னுடையவாயான
து தேவரீரை வைதுகொண்டேயிருக்கும அடியாராக
ளுடனே போர்பண்ணிக்கொண்டேயிருக்கும் மகத்
தாகியபாபசாஸ்திரங்களையே கற்கும் ஆதலால்வே
தத்திலே சொல்லாநின்ற விரோதிகளைப் பார்க்கி
லும் அதிகரிக்கிறாநின்ற விரோதியாகி நாயினேன்
தேவரீர் சந்நிதானத்திலே விண்ணப்பஞ் செய்துவி
ட்டேன் உமதுசித்தம எனதுபாக்கியம் வாசனை
சேர்ந்த நாபிக்கமலம் பொருந்தாநின்ற பராபர
னென்னும் அரிதாகிய ஸ்ரீமந்நாராயணா

கற்பாவினிற் கடவாதன் கலிகாலமேதினியாடி
டுங், தோற்பாவைநா னதுமெய்ச்சவேதொடு சூத்
திரத்துறைகாரணீ, மேற்பாவபுண்ணியமான நல்வி
னைதீவினைக்கெவராகுவார், நாற்பாவினுக்கொருமூ
லமே நாராயணாநாராயணா.

(இ-ள்) கடலிலேஉதித்துவராநின்ற சூரியனாலே
அழியும்படியான காலப் பிரமாணத் தொடுங்கூ
டிய கலிகால மேதினியாகவும் ஆடாநின்ற தோற்
பதுமை யானகவும்மனதுமெய் சும்படியாய்த் தொ
டுக்காநின்றசூஸ்திரத்துறைகாரர் தேவரீரானமே
லேவராநின்றபாபபுண்ணியங்களுக்கு அதிகாரிக
ள எவராகுவார்கள் இந்தநியாயத்தைத் தெரியப்ப
டுத்தவேண்டும் பறப்பன ஊர்வனநடப்பன இருப்
பனவாகிய நான்குவிதசாதிகளுக்கெல்லாஞ்சமான
மான ஆதரவு தேவரீரேயன்றி வேறில்லை ஸ்ரீமந்நா
ராயணா-எ-று.

இரையாலெழுந் சுவரானநா லிருசாணிடம்பிடி
யாமலே, கரையாமலே தகராமலே கழலாமலேய
ழலாமலே, திரையாமலே வினைமூடி கண் டிறவாம
லே வகையென்னைதா. னரையாதசோ றிடுமைய
னேநாராயணாநாராயணா

(இ-ள்) ஆகாயத்திலே வளராநின்ற என்சாணுட
ம்பாகிய சுவரானது கரைந்துபோகாமலும் இடிந்

துபோகாமலும் அதிர்ந்து போகாமலும் வெந்து போகாமலும்நிரைந்துபோகாமலும் வினையிலேலே இறந்துபோய்மறுபடியும்பிறந்து விழிதிறவாமலும் இருக்கும்வகையாதெனில் நரைதிரை மூப்பில்லாத அமுதத்தைக் கொடுத்தருளவேண்டும் என்னையனுகிய ஸ்ரீமந்நாராயணா-எ-று. ௩௨

புற்கொண்டுவாழ் பசுவாரெடார் புலியாழ்கிணற்றிடைவீழினுங் கற்கொண்டு வாதடிகொண்டுவா மடிதென்பரப்படு பாவிநான், ஏற்கொண்ட நோய்க்கெவராகுவா ரினிநீயலாதில்லெட்டியும், நற்கொண்டலால்வளர்கின்றதே நாராயணா நாராயணா.

(இ-ள்) புல்லையுண்டுவாழாநின்ற பசுவானதுகிணற்றிலேவிழுந்தால் கண்டவர்கள் யாரேனும்எடுத்துவிடுவார்கள் புலியானது விழுந்தகாலுல் சீக்கிரமாய் கற்களுந்தடிகளுங்கொண்டு கொல்லுவார்கள் அத்தன்மைபோலப் படுபாவியான என்னுடையதேகத்திலே கொண்ட நோயைத்தீர்க்க எவரிருக்கிறார்கள் இனிதேவரீரையன்றி வேறில்லைமழையிலுலே எட்டிச்செடியும் வளர்வதுபோலஉம்முடையகிருபையிலுலேஅடியேனும்வளரவேண்டும் ஸ்ரீமந்நாராயணா-எ-று. ௩௩

அரசன்கையா லபயம்பெறு ரயலாருமன்னரையண்டினல், விரசென்றுவந்திடமீவர்நீவினவாதசீவிகளண்டினல், வரசங்கசாதியரஞ்சுவார் வருகென்னமேல்வகை யென்னதான், நரசிங்கனே முரபங்கனேநாராயணாநாராயணா.

(இ-ள்) தாங்கள் நம்பியிருக்கும் அரசனாலே பிரயோசன மில்லையென்று மறுமன்னவ ரிடத்திலே சேர்ந்தால் சந்தோஷித்து எதிரேவந்து இடங்கொடுத்து இரட்சிப்பார்கள் அத்தன்மையாகத் தேவரீரை நம்பினபேர்கள் யாவரேனும் உம்மை வினவாமல் வெறுத்துப் பக்கத்திலே சென்றால் முக்கியமா

ன சங்கரன்முதலாகிய தேவதைகளாலும்இரட்
சிக்கப்பயப்படுவார்கள் ஆதலால்கதிவேறில்லை அ
டியேனை வாவென்றழைக்கவகையென்னவெண்ணி
யிருக்கிறீரோதெரியாது நரசிங்கரூபனே முரகாசுர
னைக் கொன்ற ஸ்ரீமந்நாராயணா. எ-று. (௬௪)

கோட்சொல்லுவேன் வதைசொல்லுவேன் கு
றைசொல்லுவேன் முறைசொல்லுவேன், கீட்சொ
ல்லுவேன்மிக சொல்லுவேன் கிலிசொல்லுவேன்
வலிசொல்லுவேன், சூட் சொல்லுவே னயனாழி
நாள்சொலவேண்டிலுஞ்சிறிதன்னையோர், நாட்
சொல்லவென்றறிகின்றிலேனாராயணா நாராயணா.

(இ-ள்) பிரமகற்பபரியந்தம் அடியே னுடைய
நாவானது கோள்களும்வதைகளுங் குறைகளும்மு
றைகளும் கீழ்மைகளும் குற்றங்களும் பயங்களும்
வலிமைகளும் வஞ்சனைகளும் இவைகளைச் சொல்
லுமேயன்றிக்கொஞ்சமாகிலுந் தேவரீர்நாமத்தை
ஒருநாளையிலேயுஞ்சொல்லும்படியாயறிந்ததேயில்
லை ஸ்ரீமந்நாராயணா.

ஆளாகிநின்னிருநாளெழுத்தறியாதநாளறிவார்க
ளைக்கேளாதநாள் செவியூறவே கிடையாதநாளதி
லாசையெழலாதநாணிலமீதுதான்முதனூலிலங்கெ
ழுதாதநாள், நாளாகுமோ வாளாயுதா நாராயணா
நாராயணா.

(இ-ள்) ஆசாரியனுடைய திருவடிகளுக்குஆளா
கித்தேவரீருடைய திருமந்திரத்தையறியாதநாளும்
தெரிந்த பாகவதரைக் கேளாதநாளும் செவிகளி
லே யூறும்படியாய்ப் பொருந்தாத நாளும் அதி
லே ஆசையானதுபெருகாதநாளும் அஞ்சாவதாவ
யதில்முதல் நாளையிலேபள்ளிக்கூடத்தில்அரியென்
றிலவெழுத்தாகிலும்எழுதிவையாதநாளும்பலகல்
ல நாளாகுமோவாளாயுதத்தை யுடைய ஸ்ரீமந்நா
ராயணா-எ-று.

வீட்டுக்குள்ளே துணையாவதும் வெளியிற்குளே துணையாவதும், கூட்டுக்குள்ளே துணையாவதுங்குன்றுக்குள்ளே துணையாவதும், காட்டுக்குள்ளே துணையாவதுங், கடலுக்குள்ளே துணையாவதும் நாட்டுக்குளே துணையாவது நாராயணா நாராயணா.

(இ-ள்) வீட்டினுக்குள்ளே துணையாயிருப்பவனும் வெளியினுக்குள்ளே துணையாயிருப்பவனும் சந்திரனுக்குள்ளே துணையாயிருப்பவனும் மலையினுக்குள்ளே துணையா யிருப்பவனும் காட்டினுக்குள்ளே துணையாயிருப்பவனுங் கடலினுக்குள்ளே துணையாயிருப்பவனும் நாட்டினுக்குள்ளே துணையாயிருப்பவனும்நீயே யன்றிவேறில்லை ஸ்ரீமந்நாராயணா.

வாய்க்கின்றதேதன் புகையண்ணலா வணக்கின்ற சாந்தரையுண்ணலா, காய்க்கின்றமரம் வெறியுண்ணலாங் கறக்கின்றவாக்கட்டுண்ணலாம், தோய்க்கின்றபால்கடையுண்ணலாத் சுவைகெட்டமானிடவா விலாம், நாய்க்கிந்த வாதனையேனையா நாராயணா நாராயணா.

(இ-ள்) தேன்கூண்டினுக்குப்புகைத்தனுஞ் சந்தனக்கட்டையினுக்குதேய்த்தலும் பழுத்தமரத்தினுக்கு சல்லெறிதலுங் கறக்கும் பசுவினுக்குக்கயிறணைத்தலுந்தோய்த்த தயிரினுக்குமத்தாலுடைத்தலும் இவைகளுக்குஇந்தஉபத்திரவுமுண்டாகில்பிறருக்குபகாரமாகும் உரிசையும்வாலுமில்லாதமானிடமென்றும்நாயினுக்குஇந்தவாசனையைக் கொடுத்தீரோ இதனாலே உமக்கென்னபிரயோசனமுண்டு தெரியச்சொல்லும் ஸ்ரீமந்நாராயணா.

தும்பிக்கையானையுமைவர்முன்றுகிலோடிவாடியகங்கையும், தம்பிக்கையாமகயோ கருந்தாதிற்கவேசதாவேதியன் கம்பிக்கையா லரனுக்குநீஎனியைய பிட்டினியையமேன், நம்பிக்கையாகியதெய்வமே நாராயணா நாராயணா,

(இ-ள்) கஜேந்திரனையும் பாண்டவரையும் வஸ்திரம்நீக்குமென்று வாடினதுரோபதையையும் ஸ்தம்பிதமாயிருந்து தவம்பண்ணுகின்ற மகத்தாகிய யோகிகளையுமிரட்சித்திருக்கட்டும் நாலுவேதத்தையுமுடைத்தாகியபிரமனுடைய சிரத்தைக்கிள்ளின சிவனுக்குப்பிச்சையிட்டுச் சாபத்தைதீர்த்தபிற்பாடும் இனிபரத்துவம் வேறேயென்று ஐயப்படலாமோ நட்பிக்கையானதெய்வமுனேயன்றி ஸ்ரீமந்நாராயணா-எ-று. ௩௧

பாலாவதோ தேனாவதோ பழமாவதோ பாகாவதோ, மேலானசர்க்கரையாவதோ விரையாருநல்லமுதாவதோ, கோலாகலப்பிணிதீரவேகுளியங்களோவனமூலியோ, நாலாவதோநின்பேர்சொலாய் நாராயணாநாராயணா.

(இ-ள்) அடியேனுடைய தேகத்திலே கோலாகலஞ்செய்யாநின்ற நோயைத்தீர்க்கும்படியானதேவரீருடைய திருநாமமானது பாலாகியதோ தேனாகியதோபழமாகியதோ பாகாகியதோ மேலாகிய சருக்கரையாகியதோவாசனைசேர்ந்த நல்லமிர்தமாகிய தேவானமூலிகையாகியதோ இவையல்லாமல் மணிமந்திரம் அவிழ்தமஇவைமூன்றுக்குமேலாகிய என்னென்று சொல்லுவோம ஸ்ரீமந்நாராயணா.

பூவுக்குநல்லதுசொல்லவோ பொலிசீதளப்புதுவாசமே, தேவுக்குநல்லதுசொல்லவோ செவியார்முனே யெதிர்நிற்பதே, ஆவுக்குநல்லது சொல்லவோ வதுசாதுவா யமுநீவதே, நாவுக்குநல்லது சொல்லவோ நாராயணா நாராயணா.

(இ-ள்) புட்பங்களுக்குள்ளே நல்லது சொல்லவேண்டுமானால் காந்தியும் குளிர்ச்சியும் புதியவாசனையும்உண்டாகிய புட்பமேயன்றி வேறில்லை தெய்வங்களுக்குள்ளே நல்லது சொல்லவேண்டுமானால்

முறையத்தைத்காதிலே கேட்குமுன்னமே அடியார்களுக்குப்பிரசன்னமாகிய தெய்வமேயன்றி வேறில்லைபசுக்களுக்குள்ளே நல்லது சொல்லவேண்டுமானல் அதுவெகுசாதுவாயமுதத்தைக்கொடுக்கும்பசுவேயன்றிவேறில்லை நாவுகளுக்குள்ளேநல்லதுசொல்லவேண்டுமானல் தேவரீருடையதிருநாமத்தைச்சொல்லியநாவேயன்றிவேறில்லை ஸ்ரீமந்நாராயணு.

ஆனந்தமாயழுவார்முனே யலர்சூடியே தொழுவார்முனே, மோனந்தனிற் கரைவார்முனேமுகிலென்னவேபுகழ்வார்முனே, தானந்தவம் புரிவார்முனே நானென்செய்கே னிவையொன்றிலேநாராயணுநாராயணு.

(இ-ள்) தேவரீருடைய திருவடியைநினைத்து ஆனந்தபாஷ்பங்களைக் கண்களிலே பெருகுவார்களுக்கு முன்னே புட்பங்களை யலங்காரஞ்செய்துதண்டஞ்சமர்ப்பிப்பார்களுக்கு முன்னே. மௌனத்தியானத்திலேஉள்ளங் கரைந்திடுவார்களுக்கு முன்னே பசுங்கொண்டலேயென்று புகழ்ந்திடுவார்களுக்கு முன்னே தானங்களுந்தவங்களுஞ் செய்திடுவார்களுக்குமுன்னே சரணுகதிசெய்திடுவார்களுக்கு முன்னே அடியேன்இவைகளிலேஒன்றுகிலும் செய்யமாட்டுவேனே ஸ்ரீமந்நாராயணு.

செரிக்கின்றவூ ணுகர்வேனலேன் சிரிக்கின்றகாரியமேசெய்வேன், கரிக்கின்றகண்படையேன் வெறுங்கழப்பன்கொடுங்கடுவஞ்சகன், பரிக்கின்றநின் னடியாரொடும்பழகேனலேன் படர்வந்தபின், நரிகின்றனேனினியென்செய்வே நாராயணுநாராணு.

(இ-ள்)சீரணமாகும்படியான ஆகாரத்தைக்கொள்ளாமல் நகைக்கும்படியான காரியமேசெய்துதெரிசனஅபேட்சையான கண்ணேயும்படையாமல் அன்பைப்பரிக்காநின்ற அடியாருடனேயுங் கூடாமல் விருதாவாகியகழப்பனுகவும் பொல்லாதவிஷம்

போலும்வஞ்சகனாகஉத்தரிக்மூத்தும்வக்கபிற்பாடு அவதியைக் கொள்ளாநின்ற நாயினே னினியென் செய்வேன் ஸ்ரீமந்நாராயணா-எ-று.

ஆதாரமேதேவதையென்பனோவடியேனையாளவெச ன்பனோ, ஓதாதுணர்ந்திடவன்புகூருபதேசிகனெ ன்பனோ. மாதாபிதா வுடலாவிநீமனைகாணியென் வளிசெய்வநீ, நாதாவுநீ தாதாவுநீ நாராயணா நாரா யணா

(இ-ள்) ஆதாரமாகிய தேவதையே யென்பனோ அடியேனையாளுங் கர்த்தனேயென்பனோ பலநூல் களையோதாமல் தன்னிலேயறிந்திட நட்புசெய்யா நின்ற உபதேசகுருவேயென்பனோ என்னென்று சொல்வேன் தாயுந்தந்தையுந் தேசமும் உயிரும் பெண்சாதியுங் காணியுந்திரவியமும் வலிமையுஞ் செல்வமும்நாதனும்பிரபுவும் நீயேயன்றிவேறில்லை ஸ்ரீமந்நாராயணா. எ-று (சச)

வடுநிந்தையே னிடுவந்தியேன் மருள் விஞ்சினே னருளஞ்சினேன், அடுசிந்தையேனெடுவிந்தையே னலை பண்பினேனுனைநம்பினேன், விடுவதன்பிலே முடுகலன்பிலேமுடுகலன்பிலேன் வினைமண்டினே னுனையண்டினேன், நடுவொன்றிலே மிளைகுன்று மோ நாராயணாநாராயணா.

(இ-ள்) குற்றம்பொருந்திய நிந்தையையும், இடு வந்தியையும் மிகுந்த மயக்கத்தையும் அருளில்லா த பொல்லாத இருதயத்தையும் பலவித துர்நடத் தையும் காரிய மென்கிற அலைச்சலையுந் தீவினையை யும்இவைகளைக்கொண்டிராநின்ற நாயினேன் இரக் கத்திலே பயந்தவனாகிய அன்பிலே துரிதமில்லாத வனாகிஒழுங்கில்லாமல்தேவரீரையடைந்தேன்மத்தியி லேயின்னமொரு விதத்தினாலே எனது வருத்தம் நீங்குமோ ஸ்ரீமந்நாராயணா-எ-று.

குடிநீரகொடீர் முகவேதிடீர்குணவெண்ணெயை வடியீர்பிரம், படியீர்னெணீறெறியீர் விழிக் கதி

கோர வஞ்சனமேமடர், கடியீர்வயிற் றியரால்வரா
கமதாடுகுக்குடமிட்டுளே, நடிமீரெனிற் பிணியஞ்
சுமோ நாராயணா நாராயணா,

(இ-ள்) குடிக்கும்படியாய் கிஷாயங்கள் நீர்கொடுங்களென்றும்முகத்துக்குளே தூபிடியுங்களென்று குடத்திலே எண்ணெயைக்காய்த்துக்கொடுங்களென்றும்பிரம்புகொண்டடித்து வெளுக்கவிபூதியை யெறியுங்களென்றும் கண்களுக்கு அதிகோர மாகியகலிக்கம்போடுங்க ளென்றும் வயித்தியருக்குக் காட்டித்திருங்களென்றும்பன்றியும்-ஆடும்-கோழியும்-பலிகொடுத்துச் சன்னதமாடிப் பாருங்களென்றுஞ்சொல்லினால்இவைகளாலேநோய் தீர்வதுண்டோ ஸ்ரீமந்நாராயணா எ-று.

பிரம்புக்குமுள் விடுமாதரைப் பிணிகட்டுநீள் பிணியுற்றவென், உரம்புக்குளே யறியாதெனுலகத்தெலாமுறைசோதிதோல், வரம்புக்குளே யெலும்புக்குளே வழும்புக்குளே தழும்புக்குளே, நரம்புக்குளேபுகவெட்கியோ நாராயணா நாராயணா.

(இ-ள்) முள்ளுகளோடுங் கூடிய பிரம்பம்புதறுகளுக்குந் தாமரைப்பிணையல்களுக்கும்மிகுந்தநோய் கொண்டிராநின்ற என்னுடைய நெஞ்சுக் குள்ளே நுழைந்தறியாம லிரும்பனென்றோ உலகத்திலிருக்கும் எல்லாவுயிர்கள் தோறும் வாசம்பண்ணுகின்ற சோதிநீயன்றி வேறில்லை ஆதலாலிது தோலுடம்பும் எலும்பும் வழும்புந்திணமும்நரம்பும் இவைமுதலிய நாற்றமானமடியினாலேபுகுந்தறிதலுக்கு வெட்கமாகியதோ ஸ்ரீமந்நாராயணா.

மன்றாடியேயதிசோபன மழைவண்ணனேவிசயங்கரா, வென்றாய்செயஞ் செயுமச்சுதா மிகவாழிகேசவனேசுபங், கன்றால்விளாவெறிந்தாய் பெருங்கலியாணமங்கலபாதவா, நன்றாய்வேங் கடநாராயணா நாராயணா.

(இ-ள்) கோபிகாஸ்திரீகளுடைய சபையிலேநடனமபண்ணுகின்றவனே உனக்கு அதிகசோபனம், மேகவண்ணனேஉனக்குவிசயம, முதலையை வென்றவனேஉனக்குசெயம்செயம், அச்சுதனேஉனக்குமிகுந்தவாழி, கேசவனேஉனக்குச்சுபம்கன்றால் விளாங்கனியெறிந்தவனே உனக்குப்பெரிதாகிய கலியாணம்மாதவனே உனக்குமங்களம் வேங்கடநாயகா நீஇத்தன்மையாக நன்றாகயிருக்கவேண்டும் ஸ்ரீமந்நாராயணா-எ-று. (சஅ)

இந்தாவென்று வெனதிர்சைநீ யெளிதீவையேயிழிவாகுமோ, சந்தானமாமைராலருச் சனைசெய்குவார் தவிர்வார்களோ, வந்தானபேர் துதியார்களோவசதேவாசொற் குறையாகுமோ நந்தாதபெண்ணைகை செய்வாளோ நாராயணா நாராயணா.

(இ-ள்) அடியேனுடையஇச்சையானபடியேஇங்கேவாவென்றுதேவரீர் எளிதாகப்பாலனைக்கொடுத்தருளினால் உமக்குஇகழ்ச்சியாகுமோ கற்பகமலரினாலே அருச்சனை செய்யாநின்றதேவர்களவிட்டுவிடுவார்களோசநகாதிவந்தபேர்கள்துதியார்களோவசுதேவருடைய உடைமையிலே குறைந்துபோகுமோ அழிவில்லாதஸ்ரீமகாலட்சுமி நகைப்பாளோசொலலும ஸ்ரீமந்நாராயணா-எ-று. (சகூ)

சிற்றப்பனே துருவற்குநீ தெதிபாண்டனார்பெரியப்பனே, கற்றநற்றத்தேவகி தங்கையோ கண்டாகனனமிதிலேசனே, சுற்றத்தரோ பெறுவோரெலாந் தொடுவேன்வழக் கிடுமென் விடேன், நற்றப்படும் யொருடநதுபோ நாராயணா நாராயணா.

(இ-ள்) தேவரீர்முன்னாளிலே இரட்சித்தபேர்களுக்குள்ளேதுருவமகாராசனுக்குநீ சிற்றப்பனோ தெதிபாண்டனென்றும குயவன் உமக்குப் பெரியப்பனோ, கலைஞருவமபோக்கிக்கிளிபோல பேசபண்ணுகின்ற அகலிகையானவள் தேவகிக்குத்தங்

ணையாகிய உமதுசிறியதாயாரோ கண்டாகனெ
ன்றும் விரோதியானவன்உமக்குப் பெண்கொடுத்
தமிதிலைச்,சனகமகாராசனாகியஅம்மானோ, இன்ன
ம்பேறுபெற்றபேர்களும் பெறும்பேறுகளும் உம
க்கு உறவின்முறையார்களோ ஆதலால் சம்பந்த
மில்லாதபேரையெல்லாம் இரட்சித்த படியினாலே
தேவரீருக்கும் அடியேனுக்கும்வழக்குவிடுவதில்லை
ஆசைப்பட்ட பலனைகொடுத்துஅப்புறம்போகவே
ண்டுமே யன்றிபோகக்கூடாது ஸ்ரீமந்நாராயணா.

தன்னெட்டெழுத் தயன்மத்தகந் தனிலேபொறி
த்தடிநாவிலே, உன்னெட்டெழுத் தெழுதாமையா
லுலகத்துளோ ரவனைத்தொழார், கன்னெட்டிடத்
தருநெட்டிடக் கனனெட்டிடக் கனகாலிபின், நன்
னெட்டெலாதொடர்பாதனேநாராயணாநாராயணா

(இ-ள்) பிரமதேவனானவன் உலகத்திலே யுள்ள
மானிடர்களுடைய தலைகளிலேதனதுநெட்டெழுத்
தைமாத்திரமெழுதி அடிநாவுகளிலேதேவரீருடை
ய அஷ்டாட்சரத்தை யெழுதாமற் போனபடியினா
லே அவனைஒருவருந்தேடுகிறதேயில்லை முல்லைநில
த்திலே கல்லுகள்நெட்டிடவும் விருட்சங்கள் நெட்
டிடவும அக்கினிகள். நெட்டிடவும்விஸ்தாரமாகிய
பசுக்கள்பின்னாலேநன்மைபெற நெடிதானதூரமெ
ல்லாமநடந்தருளாநின்றதிருவடியை யுடைத்தாகிய
ஸ்ரீமந்நாராயணா-எ-று.

உரலுக்குமோ ருறுபஞ்சமோவுனைநச்சினேனெ
னையச்சமன், விரலிட்டுதேர் வினைவல்லனேவிதிசை
க்குமவ்விரலோசையால், பொறனுற்றநோய் கழல
ப பணைப்புதிதாமருந் தொருதூதனால்,நாலைக்குளா
ய் வரவேண்டுமோ நாராயணா நாராயணா.

(இ-ள்) குத்தாநின்ற உரலினுக்கு ஒருகாலத்தி
லேயும் தரித்திரம் வருவதில்லை அத்தன்மைபோலத்
தேவரீரிடத்திலேவிரும்பிய ஐசுவரியமேயன்றி இல்

லாததில்லையேஆதலால்உம்மிடத்திலேஇச்சைகொ
ண்டேன்இனிஎன்னைஇந்தயமனானவன் விரல்விட்டு
க்காட்டியறிந்துவினைசெய்யமாட்டுவனோ பிரமாவி
னுடையகைகளிலேயிராநின்ற விரலும் என்றலையி
லேயெழுத அசையமாட்டாதுவருத்தத்தைச் செய்
யாநின்றநோயைத் தீரும்படியாய்ச் செய்வதற்கும்
புதிதாய் ஒப்பில்லாதசஞ்சீவியானது ஸ்ரீஅனுமா
ராலே வரவேண்டுமோ ஸீராப்திவாசனாகிய ஸ்ரீம
ந்நாராயணா-எ-று.

சமையாதிதே வதையென்பதுஞ், சமை யாதிநீ
ன்பெயரென்பதும், உமையாளுடன் பரமன்புனைந்
துணைமாமறைப் பொருளென்பதும், தமையாள்வ
தென்றிமையோர்திலோத்தமைபாதியுன்புகழ்கின்
றதும், நமையாமலே யெனையாளுவராய் நாராயணா
நாராயணா.

(இ-ள்) சமயங்களுக் கெல்லாம் அதிதேவதை நீ
யேயென்றும், மரணசமையத்துக்கு ஆகிவது உம்மு
டையபெயரே யென்றும் மலத்தாகிய வேதப்பொ
ருள் நீயேயென்றும். உமையவளுக்குச் சிவன்புரிந்
துநிச்சயம்பண்ணினதும் தேவதைகளுக்குத் திலோ
த்தமைக்கும் அதிபனாகியதேவேந்திரன் தங்களை
இரட்சிக்குங் கர்த்தனேயென்றுபுகழ்கின்றதுங்கெ
டாமற்படி என்னை இரட்சித்தருளவேண்டும்ஸ்ரீமந்
நாராயணா எ-று. (௫௩)

நீயண்டராலடிபட்டநா ளினைவில்லைநின்னுதரத்
துளே, போயண்டகோடியிலெந்தவோர் புறாயிற்
குளேவிளையாடினேன், மாயங்கடந்தறிவேனலோ
வரதன்கெடீர் வானோர்க்கெலாம்நாயன்கெடீர்விடு
மென்பனேநாராயணா நாராயணா.

(இ-ள்) தேவரீர் அசோதைமுதலாகியஇடையரா
லேஅடிபட்டநாளையிலேஅடியேனுக்குநினைவில்லா
மற்போதய அதாஎதனாலேஎன்றால் உமதுகுட்சிக்
குள்ளேயிராநின்ற அண்டகோடிகளிலே எந்தத்

துக்களுக்குள்ளே விளையாடினேன்நீர்செயும் மாய மதீங்கியறிநதேனையானால் தேவதைகளுக்கெல்லா மும்மைவரதனென்றும் நாயகனென்றும் அந்தஇ டையர்களுக்குத் தெரியப்படச்சொல்லிக் கெடுவீர கள்விட்டுவிடுங்கோளென்றுநீக்கி விடுவேன் திரு மேனி யென்னமாக நொந்ததோஇப்போது பெரி யோர்களையறிந்தேன் இருந்துஞ் சமயததிலேஉத வாதேபோனேன் இனிவருந்தி என்னபிரயோசன ம் ஸ்ரீமந்நாராயணா-எ-று. (௩௪)

காசிக்குளுங் கயைபிற்குளுங் கழியாதபாதகனு மையால், கூசிகுலேந் தனைவந்தியேன் குறையாகு மோவினையென்பதோர், வாசிக்குவந் தருள்செய்கு வாய் வயிரத்திரா வணன்றங்கைதன் நாசிக்கு வா ளுறியையனே நாராயணா நாராயணா.

(இ-ள்.) காசியினிடத்திலேயுங் கயாவினிடத்தி லேயும் வாசம்பண்ணினாலும் நீங்காத பாவியான ப டியினாலே மனதுகூசிக்குலைந்து தேவரீரைத் தோத் திரம்பண்ணாமல் விட்டுவிட்டேன் அதினாலே உமக் குக்குறைவாகுமோஅடியேனுடைய வினைசென்று ம்வாசி திரும்படியாய்வந்துகிருபைசெய்தருளவே ண்டும் முன்னாளிலே வயிரத்தோடுங்கூடிய இராவ ணன்தங்கை யாகிய சூர்ப்பனகையினது மூக்கறு ம்படியாய்ச் செய்த வாளாயுதத்தையுடைய ஸ்ரீமந் நாராயணா-எ-று. (௩௫)

தாளுக்கவாவியநா வினுஞ்சலியாது வாசனியா னநேசம் ஆளைக்கெடா தின்றைக்குவா வசையாம லேயன்றைக்குவா தோளுக்குவாளியை செய்தவ ன்துயர்கண்டிராவணவினறு போய்நாளைக்கு வா வெனுமையனே நாராயணா நாராயணா.

(இ-ள்) தேவரீருடைய திருவடிகளுக்கு ஆசை கொள்ளாநின்ற எனதுநெஞ்சிலேயும் நாவிலேயும் வருத்தமில்லாமல் வரவேண்டுஞ் சனியானநோயா னது அடிமையைக்கெடுத்துவிடாமல் என்றைக்மே

வர வேண்டுஞ,சரமதிசையிலேயமனைக்கண்டு சஞ்ச
லிக்குமுன்னமேயுன்றைக்குவரவேண்டும முன்னு
ளையில் பாவங்களைத்தோள்களிமேல யழுதநம்படி
யாய்ச்செய்த அவனது ஆயரத்தைக்கண்டு வபிரத
னதயுடையராவனு நீ இன்றைக்குச்சென்றுநாளைக்
குவரவென்றுகிருபைபண்ணு நின்றவென்னையனுகிய
ஸ்ரீமந்நாராயணா-எ-று. (௫௬)

விக்கற்கிடமு பொருமற்கிடம் விடுமூர்ச்சமேமெ
ழுதற்கிடம். சக்கற்கிடமிருமற்கிடங் கருதற்கிடந்
திருகற்கிடம், சொக்கற்கிடங் குளிர்தற்கிடஞ் சுடு
தற்கிடம் வெருவற்கிடம், நக்கற்கிடந் தருமைய
னே நாராயணா நாராயணா.

(இ-ள்) விக்கலென்றும பொருமலென்றும்மேல்
மூச்சென்றுங் கக்கலென்றும் இருமலென்றுங்கரு
குலென்றும் திருகலென்றுஞ் சொக்குக லென்றும்
குளிர்தலென்றுஞ் சுடுதலென்றும் பயப்படுதலென்
றும்நக்கலென்றுஞ் சுடுதலென்றும் பயப்படுதலெ
ன்றும் நக்கலென்றுஞ் சொல்லாநின்ற அந்தப் பீ
டைகளுக்கெல்லாம்இடங்கொடுக்கிராநின்ற தேக
த்தையுடைத்தாகிய அடியேனை இரட்சித்தருளவே
ண்டும் ஸ்ரீமந்நாராயணா எ-று. (௫௭)

துளசிதளத் துளசிதளத் தூய்நீரதே குடிநீரதா
ம், [illegible]ளதாயிரம்பெயரென்றுநூற்றொருகோடிமந்
திரமேலதாம், வளமார்பின்மாமணியென்னவே ம
ணியாமெனைப் பிணியெனசெயும், நளகூபரன்பகை
வென்தவா நாராயணா நாராயணா

(இ-ள்) திருத்துழாயினது தளங்களிலேபொருந்
துங்குளிர்ந்தநீரே குடியிருக்குங் கிஷாயங்களுக்கெ
ல்லாம்மேலாகியகிஷாயநீராகவும் நிலைபெற்றிராநி
ன்ற ஆயிரந்திருநாமங்களும் நூற்றொரு கோலிமந்
திரங்களுக்குமேலாகிய மந்திரமாகவும் வளம்பொ
ருந்தா நின்ற திருமார்பிலே யிருக்குங்கவுஸ்துவ
மணிமேயமணிகளுக்கெல்லாம் மேலாகியமணியாக

யும்இருக்கின்ற ஆராபிடத்தில்இதுவேமணிமந்திர
ஔஷதமாகவிருக்கப்பிணியானது அடியேனையெ
ன்னசெய்யும் நல்கூபரனுடைய சாபத்தைத் தீர்த்
தருளாநின்ற ஸ்ரீமந்நாராயணா-எ-று.

சுவையோசையூறொளிமாமணந் தொடாமனத்
துழல் கொண்டும், சுவைமானுமானையும்விட்டி
லுங்களிவண்டுமேவிளிகின்றபோல், இவைதாபமெ
ன்றினிதூண்டிலே னினியென்செய்வேன், நவைதீ
ர்மேயருள்செய்குவாய் நாராயணா நாராயணா.

(இ-ள்) ஆகார விருகையினாலே கொண்டையும்
மணியோசையினாலே கிளைமானும்தேகபரிசத்தினா
லேஆனையுந் தீபப்பிரகாசத்தினாலே விட்டிற்பூச்சி
யும் வாசனையினாலே மதத்தவண்டும் இவையைந்தும்
மனந்தொடர்ந்துசுழன்று விழுந்திறந்துபோவது
போலே எனதுபஞ்சஇந்திரியமும் இதுநன்மையெ
ன்றும்இதுதீமையென்றும் தெரிந்து புசிப்பதில்லை
இனியென்செய்தேன்இந்தக்குற்றந் தீரும்படியாய்
க் கிருபைசெய்தருள வேண்டும் ஸ்ரீமந்நாராயணா.

நெட்டேணியின் படியெட்டுமோ நின்னெட்டெ
ழுத்தெழி லண்டமேல், எட்டாமெனும் பதமெட்
டவேயிரசித்த சர்க்கரையேயதின், வட்டேபசும்
ப்ழமேசதாமதுரித்தவா ரமுதேயெனுள், நட்டே
யருட்புனல் காட்டுவாய் நாராயணா நாராயணா

(இ-ள்) மூங்கில்களாலே நெடிதா யமைத்திராநி
ன்றஏணியினது படிகளிலேயேறினால் பரமதம்எட்
டமாட்டாது ஆதலால்எழு ஆபரணத்தோடுங்கூடி
ய அண்டத்துக்குமேல் எட்டாவதாகிய அந்தப்பர
மபதத்துக்குஏறிவர உபாயமுண்டு அதுயாதெனில்
நினது திருமந்திரமாகியஎட்டெழுத்தையும் எனது
நெஞ்சிலேநட்டுஇரம்பியமான சருக்கரையுங் கற்க
ண்டுங் கனிந்தமுப்பழமும் நித்தியமதுரமாகிய ஆ
ராவமிர்தமு மிவைகளுடைய சுவைபோலேபரவும்

படியாகக் கிருபைப் புனல்கட்டினல்லெறிவருவேன்
ஸ்ரீமந்நாராயணா எ-று

காணுங்கணே குவியுங்கையே கருதுள்ளமே கன
னாஞ்சனமே, பூணும்புயம்புள சாங்கமே புகழ்நாவ
தேதிகழ்கேழ்வியோ, ஆணும்பெணும், சரணென்ப
தேயவையல்லநானபராதிகாண், நாணுமபெயர்க்
காதாரமே நாராயணா நாராயணா

(இ-ள்) தேவரீர்திருவடியைக் காணாநின்ற கண்
களுங் குவியாநின்றகைகளுமநினையாநின்றவுள்ளங்
களுஞ்சம்பந்தாக்கினி பொருந்திய சங்குசக்ரவா
ஞ்சனம்பூணாநின்ற புஜங்களுமபுளகங்கொள்ளாநி
ன்றதேகங்களும்புகழாநின்றநாவுகளும் கேட்காநி
ன்ற செவிகளும் இவைகள் பொருந்திக் குடும்பத்
துடனே சரணாகதி பண்ணாநின்ற அடியார்களைப்
போலப் பொருந்தினநானல்ல மிகுந்த அபராதத்
தையுடையவன் ஆகலால்தரிசனம்பண்ணவெட்கத்
தையடைந்தேன், இத்தன்மையாம்வெட்கத்தைய
டைந்த பேர்களுக்கெல்லா மாதாரமாகிய ஸ்ரீமந்
நாராயணா-எ-று

கவிநல்லதோர் கவிதியதே கனமூடனான் விதை
வித்திடும், புவிநல்லதேல விளையப்போமே புகழ்ந
ல்லதேல் புகர்கேட்கவென், செவிநல்லதே லருணா
ல்லதே செயனல்லதேலியனல்லதே, நவினல்லதே
வரிநாவிலே நாராயணா நாராயணா

(இ-ள்) மிகுந்தமூடனானவன் பாடாநின்ற கவி
தையானது நன்மையாயதோ தீமையாயதோ தெ
ரியவராது விதைக்காநின்றவிதையானது பூமிநல்ல
தானபடியினாலே விளையுமேயன்றிவிளையாமற்போ
வதில்லை ஆதலாலுமது புகழுங்கிருபையுஞ் செயலு
ம் இயலும் நல்லதானபடியினாலே அதையென்காதி
லே கேட்டு நாவினாலே தோத்திரம் பண்ணினால்ந
ன்மைவருமேயன்றித்துன்பம் வருவதில்லை ஸ்ரீமந்
நாராயணா-எ-று.

பகைகொண்டபா தகந்தகமமா நாராநாதாரு
ணாதனெனு, சகைகொண்ட அகலிகேயைப்பிழலை
யையாணையமாதியாம, கலைகொண்டமோ துகைதா
கருமோகாவளைநாவனையப்பிலேன், கலைகொ
ண்ட காரியமாகுமோ நாராயணா நாராயணா.

(இ-ள்) தேவரீரிடத்திலே அனாதியொருநகாரின்
றதாகவதாளசொல்லிய ஆசமாசாரகளை எனக்கு
காணாதுகேட்பதுமில்லை கெஞ்சாநாதருகுவதுமி
ல்லை அலையாநின்ற பாதகத்தடலேலே விழுந்தனை
னைக்காமமெ வெதுளிமயக்கமென்கிற பிரமையையெடு
த்துக கொண்டு விளையானதா மோகியடிக்கசசெய்யு
ந திருட்டுமனக்கை யுடைத்தான வாயு மிடத்தி
லே பத்தியில்லாமல பரமபதத்துக்குத் சாகலகொ
ண்டால் அந்தக்காரிய மாகுமோ ஸ்ரீமந்நாராயணா.

பலகூறுபட்டொருநெஞ்சினன் பரிசென்னவெப்ப
கனுமானவா, விலகூறுகொண்டெனை விண்டுகொ
ண்டிர னீக்கிமோரா துகர்வாரநேரா, பலகூறலாய்நீ
தானுமென் மதிதன்னைவிட டெனையொரதனை, நல
கூறுவார சுரதேனுவே நாராயணா நாராயணா

(இ-ள்) அடியேன்பலவிதமான இடையூறுபட்ட
ஒருநெஞ்சையுடையவனானேன் தேவரீர் வாய்வுபரி
சம்போலே யெங்குநிறைநதவரானீர் ஆதலால் எனை
னைமாத்திரம்நீங்குமபடியான குற்றத்தைத் தேடிவி
ட்டதென்னே விரல்நீக்கி மோரைக்குடிக்கிறபேர்க
ளுமுளரோ கிருபையுற்றுபெருகிய உண்மையா
னஇருதயத்திலேயென்னைமறந்துவிட்ட படியினாலே
தேவரீரும் அடியேனுமேகமானமேயன்றி அதிசய
மில்லை நன்மையாகத்தோத்திரம்பண்ணுகின்ற தே
வர்களுக்குககாமதேனுவாகிய ஸ்ரீமந்நாராயணா

வாஞ்சிக்கதேவதையாருநீ வடவேங்கடத்தனிநி
ற்கவும், நீஞசிதத்தியுநதனை வீணிலேநிழல்கண்டபி
ன் வெபினிறபரோ, காஞசித்தலக்கருணாகரனே க

ணகோபுரக்கொடியாடுபொன், ஞஞ்சிற்றிருப்பதி
வள்ளலே நாராயணா நாராயணா.

(இ-ள்.) அடியேனுடைய நெஞ்சிலே ஆசைகொ
ள்ளாநின்ற தெய்வமாகியதேவரீரிந்தத் திருவேங்க
டத்திலேதானேயெழுந்தருளியிருப்பது தெரியாம
ல் வீணிலேஉலகமெல்லாந் திரிந்தலைந்தேன் இனிநி
ழல் கண்டபேர்கள் வெயிலில்நிற்பதுண்டோ கண
ம்பொருந்திய கோபுரங்களிலே கொடிகளாடாநி
ன்ற அழகியமதில்களோடுங்கூடியகாஞ்சித்தலமுத
லாகிய நூற்றெட்டுதிருப்பதிகளிலேயும் அருளாள
னென்றும்வள்ளலென்றுவிளங்கிய ஸ்ரீமந்நாராயணா

மைநாகமா ழியையண்டிவாழ்வகையென்னநின்
னருள்வெள்ளவாஞ், சையிஞலிருந்திலூறவே ச
மைவேனுறத்தருமாறெவன், சையினலிரிந்திடரண்
ணியகலிதிரயருள்செய்திடும்,நைஞரினிற்சரியாவ
னே நாராயணா நாராயணா.

(இ-ள்) மைநாகமலையானது சமுத்திரத்திலேமு
ழுகிவாழுந்தன்மைபோலே தேவரீருடைய கிருபா
சமுத்திரத்திலே ஆசையாயிருந்து ஊறும்படியாய்
ப்பொருந்தின எனக்குக்கொடுக்கும்படியானமார்
க்கம் எவ்விடத்திலேயே தெரியவராதுபிரமாவினு
டைய சிரத்தைக்கிள்ளிப் பொருந்தாநின்ற தரித்தி
ரம்தீரும்படியாய்த்தேவரீர் கிருபைபண்ணுநின்ற
ருத்திரனுக்குச் சமானமாகமாட்டுவேனே ஸ்ரீமந்
நாராயணா-எ-று.

எமக்கென்றுவாழ் குடும்பத்திலேயிழுப் புண்ணு
வாரெமதாதையார், தமக்கொன்றைவைத் திலரெ
ன்பரேசழக்குள்ளபேர் வழக்குள்ளபேர், சுமக்கின்
றவச்சுமையாளனச் சுதன்மற்றைபச் சுமைகட்கெ
ம்நமகென்னகாரியமென்ரேநாராயணாநாராயணா

(இ-ள்) எம்மதென்றுவாழாநின்றகுடும்பத்திலே
அவதிப்படும்பேர்கள் நம்முடையஅவதி தீரும்படி
யாய்நம்முடையபிதாக்கள் நமக்குஒன்றையும் வை

யாமற்போனூர்களேயென்றுபாவிகள்அழுவார்கள் இந்தச்சம்சாரமாகியசுமையைசுமக்காநின்றபுருஷ ன் அச்சுதனிருக்கையாலே அந்தச்சுமைகளைத்தா ங்காமக்கென்னகாரியமென்றி அறிவாளர் சந்தோ ஷிப்பார் ஸ்ரீமந்நாராயணா-ஏ-று.

பசுகட்குமாயினைபாடியிற் பலபாடியாடியுமாயர் தம, சிசுகட்குமா யினைமைந்தனைத் திருட்டுக்கு மாயினையன்றுதான், மூசக்கட்குமாயினை நாயினே ன் முசிப்புக்குமாயருள்பூவையே, நசிக்கிப்பின்வா சனைகொள்வரோ நாராயணா நாராயணா,

(இ-ள்) ஆயர்பாடியிலே பிராநின்றபசுவுகூட்டங் களுக்கு இரட்சககர்த்தாவாகியும் இடைப்பிள்ளைக ளுக்குப்பாடலுடனே ஆடல்காட்டிபுஞ் சிறுபிள் ளையாகிய வெண்ணெய்திருடுந் தொழிலுக்கு இசை ந்ததுமல்லாமல்முன்னாளையிலே குரங்குகளுக்குநே சமாகி இரட்சித்ததேவரீர் நாயினேனுடைய களர் ச்சிக்குக் கிருபைபண்ணாமல் புட்பத்தைநசுக்கிமுக ர்வாரைப்போல உபேட்சைபண்ணலாமோ ஸ்ரீம ந்நாராயணா-எ-று

குலங்காணவே குடிகாணதே குணங்காணவே ப மூதாயினும், பலங்காணுநின் னடியாரெனிற்பவசா கரப்பென்னுளங், கலங்காமலேகலங்காணுமேகழூ ளாமலே கழல்காணுமே,நலங்காமலே நலங்காணு மே நாராயணா நாராயணா.

(இ-ள்) குலவண்மையுங் குலத்தின்நிலைமையுங்கு ணப்பெருமையும் இவைகளைக் காணுமிடத்தில் ப மூதாயிருந்தாலுந் தேவரீருக்கு அடிமைப்பட்டார் களேயானல்மேன்மைபெறுவார்கள் ஆதலால் பா வசமுத்திரப் பரப்புக்குள்ளே என்னுடையநெஞ்ச மானது கலங்கிஒதுங்கிநலங்காமல் நலங்காணும்ப டியாய்க் கப்பலைப்போலேதிருவடி காட்டவேண் டும் ஸ்ரீமந்நாராயணா எ-று.

ஈன்றேனுநீ யலனுமவ் வியலூந்தியண் டினன
ல்லனிற், பொன்றேனெவன் பெறுபிள்ளையைப்
போபோபிதா வினவாதிரான், சான்றோர்முனேயி
னிநோயைநீதவிராயெனிற் சபதங்கெடும்,நான்றே
ணைவீசிய வாளனே நாராயணா நாராயணா.

(இ-ள்) என்னைப்பெற்றவனுமல்லவோநாநாலும்
அருமையான இயல்பொருந்திய உமதுஉந்தியிலே
யிருந்தவனுமல்லவோ உம்மைப்போலே எவரிருக்
கிறார்கள்போபோபிதாவானவன்பெற்றபிள்ளையை
வினவாதிருப்பானோ பெரியோர்கள்முன்பாகஎன்
னுடைய நோயை இனிதீரமற்போனீராளல் உம
துசரணாகதிசம்ரட்சணை யென்கிறநெறி கெட்டுப்
போகும் பகைஞரைவீசியவாளாயுதத்தை யுடைத்
தாகிய ஸ்ரீமந்நாராயணா-எ-று

கஞ்சப்பதந் தனையங்கனேகட்டிக்,கரைந்தவசத்
தராய்நெஞ்சத்துநா ரணவென்றுதா னியமித்துநித்
திரைகொள்ளுவார், கொஞ்சத்தைநின் றளவாக்கு
வாய் குணபத்தைவாழ் குடியாக்குவாய்நஞ்சத்தை
யாரமுதாக்குவாய் நாராயணா நாராயணா.

(இ-ள்) தேவரீருடைய தாமரைபோலுந்திருவடி
யைஉள்ளத்திலே நினைந்து ஞானக்கயிற்றினாலேஅ
ங்ஙனேகட்டிக் கரைந்துருகில் பரவசத்தையடைந்
து ஸ்ரீமந்நாராயணனேயென்று நிச்சயம்பண்ணி
ஆனந்த நித்திரைகொள்ளுவார்கள் துரும்புபோ
லே யிருந்தாலும் அவர்களை மகாமேருவாகச்செய்
தருளுவா யதுவுமல்லாமல்புழுக்களை ஐஸ்வரியத்
தையுடைத்தாகிய குடும்பங்களாகவும் விஷத்தை
அமிர்தமாகவுஞ்செய்தருளாநின்ற மகிமையையுடை
ய ஸ்ரீமந்நாராயணா. எ-று.

எழிநெட்டிருப் பருமேனிவந் தென்கைக்ககப்ப
டுமென்றுநான், தழுவிக்கொளத் திரிகின்றதெனை ச
வசக்கராசரமாகுநீ. வழுவிக்கொடங் கிங்கோடியே

வாநல்லமுன்வரவிஞ்சியே, நழுவிக்கொடே திரிகின்
றதென் நாராயணா நாராயணா.

(இ-ள்) நெடியதாய் வளர்ந்திராநின்ற உமதுபரு
த்ததிருமேனியானது என்னுகைக்குள்ளேவந்தகப்
படுமென்று நான்தழுவிக்கொள்ளத் திரிந்திட்டால்
சகலசராசரங்களாகிய தேவரீர்என்முன்னே வந்து
வரத்தைக்கொடுக்கப்பயந்தோ அங்குமிங்குமோடி
வழுவிக்கொண்டும் நழுவிக்கொண்டுந் திரிகின்றதெ
ன்று சொல்லும் ஸ்ரீமந்நாராயணா-எ-று.

எனைக்காக்கநீ வரமென்மையென் றிருப்பாய்ப
ராக்கதுமுண்டுநின், தனைக்காத்தவாகனனில்லையோ
தகுசேனைகாவலனில்லையோ, நினைக்காத்தசேடனு
மில்லையோநினைவில்லையோ விமையோர்பிரா, ணனை
க்காத்தமாருதியில்லையோ நாராயணா நாராயணா.

(இ-ள்) அடியேனை இரட்சிக்கவருதல்மென்மை
யென்றெண்ணியிருப்பீர் இருக்குமெண்ணத்தில் ப
ராக்குவந்ததோ அல்லது தேவரீருக்கு வாகனமாக
வுந் துணையாகவுங் காத்துக்கொண்டிருக்கின்றகருட
னுஞ் சேனைக்காவலனும் ஆதிசேஷனுந் தேவர்க
ளாகிய வானவர்களுயிரை இரட்சிக்கசஞ்சீவிகொ
ண்டுவந்த அநுமானாகிய இவர்களில்லாமற்போனா
ர்களோ அல்லது திருவுள்ளத்தில்ஞாபகமில்லையோ
சொல்லும் ஸ்ரீமந்நாராயணா-எ-று.

கண்போன்றகோமகன்மாற்றவன் கடு[illegible]ாத்த
பொய்க் கிருள்பார்த்ததோர், பண்போன்றநானு
றைசெய்யநான் பலபொய்ச்சொலால் விளையாடி
னேன், மண்பொன்றநீ றனல்பொன்றிவிண் வளி
பொன்றவே வருமன்றுநின், நண்பொன்றுநீ தறல்
வேண்டுமே நாராயணா நாராயணா.

(இ-ள்) கண்பார்வைபோன திருதராட்டிறன் கு
மாரனாகிய துரியோதனனுக்குப் பகைவனான தர்ம
ராசன்கடுகளவுபொய்சொன்னதினாலே இருள்சூழ்
ந்த நரகத்தைப் பார்த்தானென்றுஒப்பில்லாத பண்

யசாஸ்திரஞ் சொல்லச்செய்யும் நான் அநேகமான
பொய்களை விளையாட்டாகச் சொல்லினேன் ஆதலா
லெனக்கென்ன கதியோ தெரியவராது, பிருதிவி அப
புதேயு, வாயு, ஆகாசம், இந்தப் பஞ்சப்பூதங்களுந்
தேவர் சூழ்ச்சியில் அடங்குங் காலத்திலே அடியே
னும் வந்து சேருவேன் அப்போ தாகிலும் உமது
நண் பொன்று மாத்திரம் வைத்து இரட்சித்தருள
வேண்டும் ஸ்ரீமந்நாராயணா.

போகேந்திரன் சிரமேந்துமின் பூதேவிபுல்லரை
யேந்தவே, ஆகேமென்று வரைசெய்வளா லடியே
னை யேந்துகைவேண்டுவாய், மாகேந்திரன்றனதம்
பியே வடவேங்கடா சலவள்ளலே, நாகேந்தியே
நரமேதியே நாராயணா நாராயணா.

(இ-ள்) சர்ப்பங்களுக்கு இராசனாகிய ஆதிசேஷ
ன்முடிகளிலே ஏந்தாநின்ற உமதுதேவியாகிய பூமி
தேவியானவள் பாபிகளைத் தாங்குதற்குவருத்தமா
யிருக்கிறதென்று தேவரீருடைய திருச்செவியிலே
விண்ணப்பஞ்செய்தருள்வாளாகில், அடியேனைமா
த்திரந் தாங்கிக்கொள்ளும்படியாய் வேண்டிக்கொ
ள்ளவேண்டும் தேவேந்திரனுக்குத் தம்பியாகவும்
திருவேங்கடமலைக்கு நாயகனாகவும் பொருந்திப்
பாரோசன்னியத்தையுங் கோவர்த்தன கிரியையும்
ஏந்தியருளாநின்ற ஸ்ரீமந்நாராயணா.

ஒழிந்திற்பிறந்திடுபாவமோ யுடலைத்தொடா வகை
நந்திடாய, வாழிக்குநாயகனிந்திரன் மனுவின்பதம
பெறவிரசியோ, அழிரகையுனகொடை மிக்கதே
வர்நடியேன்மிகப்பெறனாகுமோ, நாழிக்குடங்கல
நகொளாருமே நாராயணா நாராயணா.

(இ-ள்) இதுந்திமேம் அச்சக்கிரவர்த்தியினுடைய
சமுமெ பாரத்திலே வாழ்வுக்கு நாயகனாகிய இந்திர
னுடைய பதமும் இச்சையாக வேண்டுவதேயில்லை
ஆதலால் ஊழ்வினையினாலே பிறந்திடாநின்றபாவ
மேதாயானது அடியேனுடையதேகத்திலே சேராவ
கை செய்தருளிப் பரமபதத்தைத் தேவரீர்கடாட்

சித்தருள வேண்டுந் திருவாழிதரித்த திருகரத்தை
யுடையவனே உம்மிடத்திலேயிருந்ததியாகம் உண்
டென்று நானிச்சை கொண்டதினாலேயிருந்து வரு
மோ என்பிராப்திஎவ்வளவேமுடியும் அதுஎத்தன்
மையென்றால் நாழிக்குடத்தைக் கொண்டுபோய்ச
முத்திரத்திலே யமிழ்த்தினால் நாழிகொள்ளுமே
யன்றி கலங்கொள்ளுவதில்லை ஸ்ரீமந்நாராயணா.

தனுவுக்குளே யுளராறுபேர் சலிகைக்குநா யக
ருன்னை நான், பனுவற்சொலாவகை தட்டுவார்பழ
கிச்சதாநெறிகட்டுவார், அனுவுற்றசோரரை வெற்
றியே யடியேனையா ளரசென்னவே, நனுகிக்கொ
டேதிரிகின்றனன் நாராயணா நாராயணா.

(இ-ள்) என்னுடைய தேகத்துக்குள்ளே இராநி
ன்றகாமம் குரோதம் லோபம்மோகம்மதம்மாச்ச
ரியம் என்றுசொல்லாநின்ற இந்தஆறு குற்றங்களு
ஞ் சலிகைக்குநாயகராய் நித்தியமும்பழகித் தேவ
ரீரே என்னை தம்மிடகவிதைகளாலேபாடாத வகை
தொடுப்பதுமல்லாமல் நன்மார்க்கத்தையுங் கொடு
க்காநின்றகிரமம் நீங்கியதிருடர்களைக் கொன்று அ
டியேனை இரட்சித்தருளுங்கர்த்தனே யென்று அடு
த்துக்கொண்டு திரிகின்றனன் ஸ்ரீமந்நாராயணா.

உடைச்சேலைதா குழைக்கோலைதா வுணச்சோ
றுதாபண்ப்பேறுதா, கடைப்பூவடா வடைக்காய
டா கறுக்காசடா கடைக்கோளனே, கிடைக்சோ
டிவாமுடிச்சேதடா கிறப்பாவையா வெறுப்பார்
போலா நடைக்காசையாயிறுத்தேனலோ நாராய
ணா நாராயணா.

(இ-ள்.) உடுக்கிறதற்குச் சேலைதாடா வென்றுகா
துக்குப் பொன்னோலை தாடாவென்றும்உண்கிறதற்
குச்சோறுதாடா வென்றும் மிகுந்தபணங்களைத்
தாடாவென்றுங் கடைப் புஷ்பங்களை வாங்கித் தா
டாவென்றும்பாக்குவெற்றிலைதாடா வென்றுங்கழி
க்குக் காசுதாடாவென்றும் கடைப்பட்ட கோள
னேயென்றும் படுக்கைக்குஓடிவாடாவென்றும் அ
டிச்சோமனிலே முடிச்சேதடாவென்றும் கிருதாக

செவ்வையுடனிவர்வந்தறிவிக்க விங்குளோர்மறுக்கத்
திகழ்நாத முனிசுவாமிக
டிவ்வியபதம்வணங்கியிவ ருரைக்கவவர்மனமுவக்கா
சீரார்ச்சகர் மூலமாய்
ஒவ்வியாவேசம்வந்தோங்குஞ் சடகோபன்றனை
யோதவிலை யென்றுகேட்க
வுடனறிந்தங்குசடகோப ரந்தாதிசெய
வுற்றமண்டப மியற்றப்பின்
வெவ்வினையுந்தீர வாங்குற்றவருரைத்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (58)

சேடன்மிசைபள்ளிகொளு மரங்கனுக்கர்த்தசா
மஞ்செய்த பிறகிந்நூலை
சீர்பெறவுள்வைத்தெவருங் கதவடைத்துச்சென் றுசய
திறந்துபார்த்திட நாரணன் [ந்
ஏடதனிற்கம்பர்கவி தனக்குநம்பெருமா
ளிசைந்ததை யொப்பம்வைக்கி
லேற்போமென் றுரைக்கவது போற்செய்யவாய்த்திரு
வேற்றுசீ ராமன்கதையை [க்க
நாடியிருந்தெல்லோரும் கேட்கவிவர்வாசிக்க
நரத்துதிகண் டாசங்கிக்க
நயந்திதற்குஞாயஞ்சொலித் தீர்ந்தபின்நரசிங்க
நற்சரிதை வரமறுக்க
வீடுபெறமார்க்கமீதென் றுரைக்கக்கேட்டனர்கள்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (59)

எல்லோருமிருந்துகேட் டிக்கதைமுடிந்தபின்
னிவர்கடப நாடரென்றங்
கிவர்க்குத்திருநாமம்புனைந்த ரங்கனைக்கண்டருளச்
திலங்குஞ்சட கோபதீர்த்தம் [செய்
சொல்லும்நற்றிருத்தளாய்ப் பிரசாதமீந்தனுப்பச்
சோழனிடம் வந்திவர்சொலத்
துரைவிற்பிறதேசபத்தாசர் சபையனையழைத்துச்
சூழவங்கி ராமகதையை
நல்லபடிவாசித்துமுடியக் கேட்டங்குற்றவர்
நாடிக்கரிபரி சால்வையும்
நயர்வஸ்த்ராபரணபூஷணை முடன்றண்டிகையாவும்
நற்கழனி யாவுமீந்து
வில்லங்கமன்றிச்சோழன் வைத்தங்கிருந்தனன்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெமழந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (60)

## காளமேகப்புலவர் சரித்திரம்.

திருவரங்கம்பெரியகோவில் மடைப்பள்ளிவேலை
செய்யும்வைணவ ரொருவருந்
திகழ்யானைக்காவலில் வசிக்குந்தாசிபின்நேயஞ்
செய்துவர வங்கறிந்தவர்
கருதியுனதிடம்வருகு மய்யங்கார்வரவொணுக்
கண்டிக்க வவள்பயந்து
கடிகியிருந்திடவரங்கநகர் சுயம்பாகிசெலக்
கண்டவளுஞ் செல்லுமென்ன
பெருகியிவர்தின்னைவிட் டிங்குபிறியேனென்னப்
பேதையவள் சிவதீட்சையும்
பெற்றிடில்வருகவென் றுரைந்திடவுமவ்விதம்
பிறகுசிவ சமயஞ்சார்ந்து

விரகங்கொண்டரங்கநகர் விட்டானைக்காவந்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (61)

கப்புமானைக்காவல் மடைப்பளியிலிவருகந்து
கண்டுபரி சாரவேலைக்
கணிகையுடன்றனமர்ந் திருக்கவவ்விடமுற்ற
கனிகொண்ட பக்தனொருவன்
செப்புமகிலாண்டீஸ்வரி யெனுமம்மையைச்
சிறந்தமந்திர மியற்றியே
தினந்துதித்துவரவவளு மறிந்தின்றருளியச்சிந்
தித்திருக்கங் கன்றுற்சவம்
ஒப்பிநடந்திடதாசி நடனமங்கியற்றப்பரி
சாரகனு மோந்துநித்ரை
யுறுதல்செயச்செல்லும்போ தெனையழைத்தங்கேசெ
ன்றவ
ளிடமுரைத்துத் துயிலப்பின்னுற் [
விப்பிரனைவிட்டிவிடந்தன் னகம்வந்தடைந்தனள்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (62)

வஞ்சனையன்றித்தாசி யேகவாலயமுளோர்
வங்குபரி சாரகனவன்
வயர்ந்துநித்திரைசெய்ய பக்தனோர்புறமிருந்து
வம்பிகையைத் துதித்திருக்கக்
கொஞ்சமேனுமிதனை யறியாமற்கதவடைத்துக்
கோவில்கார்ப் போர்கள்செல்லக்
கோணமலீஸ்வரியும் வஸ்திரபூஷணமணிந்துக்
கொலுமடந்தை போலிவ்விடஞ்

சஞ்சலத்துடன்சதா தியானிக்கும்பக்தனிடந்
தான்வந்து நின்றுவாயைத்
தானுந்திறவெனவிவன் மறுக்கத்துயில்பபனைக்கிட்டு
தன்வாய்த்தம்பல மீந்தபின்
விஞ்சையளித்தகலவிவ னெழுந்துகவிபாடினன்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (63)

சதுரிகழ்ந்திடவிவர்க்குக் காளியெனத்திருநாம
மிருக்கத்தன் வாக்கிற்கவியை
யிசைந்துசெயவிவர்சொற் போலாகவதைக்கண்டவர்
ளிவர்காள மேகமென்ன
நீதியறிந்தப்பதியுளோர் பயந்திருக்கத்தினம்
நேர்பெண்க ளிவரைக்கண்டு
நிரைந்துபெருக்கும் விளக்கமாறதுவுஞ்செல்லுமெனை
நேர்ந்துரைக்க விவர்கேட்டபின்
சாதகமுடன்பெருக்கப் பெருக்கத்தேய்ந்திடுமென்ன
தானுரைத்து செல்லவாங்கு
தாவியதுபோலிந்நாள் வரையிருக்கதாசியிடா
தான்கிழக்கு தேயஞ்சென்று
வேதனையுறுமல்வருகிறே னென்றங்குரைத்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (64)

செப்பியதைக்கேட்டவளூந் தரளமுண்டங்கெனக்கு
தேவரீர் வாங்கிவாருந்
திவ்யகுணசுமுகரேவென் றுரைக்கவவர்கேட்டுத்
திருமல்ராயன் பட்டிணம்

கப்புமாவணம்வந்து வீற்றிருந்துதாம்பூலங்
காசிந்து வாங்கிதானுங்
கனிவாயிற்கொண்டிருக்கவ் வூரரசன்கவியுமதி
மதுரக்கவியெனச் சொல்பவன்
ஒப்பிச்சிவிகையிலேறி விருதுகள்கூறிவர
வுவந்துகண் டோர்கள்நிற்க
வுறுதியுடனிவரிருக்கப் பார்த்துறுமியவனுமங்
கோகோகீரா ரென்னவும்
விப்பிரருங்காளமேகப் புலவரென்றனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (65)

சொல்லக்கேட்டக்கவிஞனதி மதுரக்கவியுமெனச்
சொலியரசன் சபையிற்சென்று
துடுக்கன்செய்யபகீர்த்தியை யுரைத்தங்கழைக்கச்செ
தூதரைவிடுத்த பின்னற் [ல
நல்லவையையொருங்கு செய்திருக்கச்சேவகர்
நன்கிவரை வந்தழைக்க
நான்வரேனென் றுசொலச் சென்றுமொழிந்திடலே
நாடியமைச்சனை விடுக்க [ந்தன்
அல்லலன்றியிவன்வந்து வாருமென்றங்சறையவிவ
ரானபல்லக்குமேள
மதுவும்வரவேண்டுமென வரவிருந்துசபைவருக
வரசனழை யாதிருக்க
வில்லங்கமறிந்துகவி செய்தங்காசனமுறவும்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (66)

கிட்டிமந்திரசக்தியாலிவ னிச்சிறப்பையுங்
　　கிளம்பிச்செய் திருக்கவேண்டுங்
கிருபையறிந்தங்குளோ ரறியாமற்கவியும்வரக்
　　கீர்த்தியுடன் கடைவீதியில்
அட்டியில்லாதிருந்ததை யுரையுமெனக்கேட்க
　　வயலகனி யாவரேனும்
வரசரேறுமதுகவிராயர்க் கெழுந்துபசரித்த
　　லாகாதிங்கிவர்க் கியாவும்
திட்டமுடன்றெரியிலதை யறியவேண்டுமெனவுஞ்
　　செப்புமட் டாவதானஞ்
சீர்பெருந்தசாவதானஞ் சோடசவதானங்
　　தெரியுமெனச் சிறுபிள்ளைகள்
வெட்டவெளியாய்ச்செய்வர் மேலுரையுமென்றனர்
　　வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
　　வீரராகவ மெய்யனே. (67)

அதனைக்கேட்டதிமதுரக் கவிராயன்சினங்கொண்டிங்
　　கனுகிமேற் றெரியத்தாமு
மறியவதையுரையுமென காளமேகப்புலவ
　　ரரிகண்டமெம கண்டமுஞ்
சதிருடனிருக்கவிதைச் செய்யவேண்டுமெனவுந்
　　தார்மன்னன் கேட்டுதாமே
சார்ந்துசெயவேண்டுமதின் விவரமுறையெனவிவருஞ்
　　சாருங்குழி நிறையோர்களும்
இதமுடனிருப்புக்கொப் பரையிருத்தித்தைலமு
　　மிசைபெற விடுத்துத்தீயை
யெறிக்கவிருப்புத்தம்பம் நடுநிருத்திப்பலகைதனி
　　லிவனிருக்கக் கரஞ்சங்கிலி

விதமிட்டுத்திக்குகரிக்கைக் கொடுத்துக்கவிசொலவும்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (48)

அச்சபையிலரசன்முதலி யாவருங்கேட்டவர்க
ளரிகண்ட மெமகண்டமு
மாகுமிதென் றுரைத்திவரைச் செய்யும்படியாவுஞ்செ
தறுபதுதண்டிகைப் புலவரும் [ய்
உச்சிதமுடன்சூழ்ந் திருக்கவிவர்மேலேறி
யோங்குந் திருவேங்கடவனே
யோதித்துதித்திடவவரு முகந்தருளிசெல்லவிங்
குற்றவர்க டாறுமாறுய்
இச்சையுடன்சமிசை யீந்திடவுமிவர்கவிபாட
வெல்லோரும் வியந்தறிந்துவாங்
கிறைவிமுன்பணிபோலிவர் செய்திறங்கிடவரச
னேற்றுச் சன்மானமீயா
விச்சைகொண்டப்பதிமண் யாரிபெயப்பாடினர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (69)

## வில்லிபுத்தூராழ்வார் சரித்திரம்.

திருவளரும்பெண்ணைசனி யூருரைவைணவகுலத்
திகழ்வீரராக வச்சார்யர்
சென்றிலகும்வில்லிபுத்தூ ரிருக்கவிவருக்கிரு
செல்வருதித்திட ஜேஷ்டர்க்குக்
கருதித்திருநாமம்வில்லி புத்தூராழ்வாரெனக்
கதித்திளைஞரோ டிவர்களுங்

காவுமீரிருமறையு முத்தமிழுங்கார்யரிடங்
  கற்றுணரவிவர் கீர்த்திகள்
பெருகியுலகெங்கும்பரவும் படியொலிக்கப்பின்
  பேணிமணஞ் செய்துகூடிப்
பெருமையுடன்வாழ்கக் கொங்குலவுமாபதியரசன்
  பெருகுமா பாரதஞ்செய
விரகமித்திப்பதியிலி யாருளாரென்றனன்
  வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுக் தருள்செய்யெனையனே
  வீரராகவ மெய்யனே. (70)

அம்மொழிகேட்டறிந்துசிலர் வில்லியுடனிளைருள
  ரவர்களா லாகுமென்றங்
கறையமறையவர்குலத்து விதவையையனுப்பியவ
  ரிருமனைவியைக் கலைத்துச்
செம்மையுடனெனதுநீதிக் கிசையவரும்படிச்
  செய்யெனவங் கனுப்பிவிட்டுத்
தீவிரம்மதுரைபாண்டிய னிடம்போயிதைச்சொலத்
  சினந்தவர்க ளவிடம்வரிலோ
தம்மைவரச்சொல்லுமென வுரைக்கவரசனுஞ்சொலத்
  தாவியிருமனை வியர்க்குத்
தாக்கியிருபிறப்பாளர் முண்டைசென்றுட்பகையைத்
  தான்செய்து செலவிருவரும்
விம்மியவர்செல்வம்பாண்டி யன்பிறித்துத்தரவருக
  வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுக் தருள்செய்யெனையனே
  வீரராகவ மெய்யனே, (71)

வந்தவர்கடம்முடைய வழக்கைச்சொலித்திருமெண
வங்குரைக்கக் கொங்கர்கோனல்
வாருமிதுசெல்லுமென வவர்கள்வரப்பார்த்திறைவன்
மதிமகிழ்வு கொண்டுகூர்வான்
சிந்தைகளித்திருவர் மாபாரதம்பாடிவரத்
தெரிந்தநும் பொருள்பிறிக்கச்
செய்வேனியானென்றறைய கேட்டுபாரதஞ்செய்து
தீட்டிவந்துரைக்கக்கோனும்
சந்தோஷமுற்றுநமதிட மியாதுவேண்டுமெனச்
சார்வில்லி புத்தூரர்தாஞ்
சார்ந்துலகிற்கவிஞரென வெவர்வரினுங்கவிதைசொல
தான்ஞேர்ப்பவர் காதையான்
விந்தையுடனறுக்கத் துறமடியுமெனக்கேட்டனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (72)

தம்பிகுணமறிந்திவர்க்குச் சன்மானந்தரவிருதைத்
தாவியிவர் பெற்றுவாழ்ந்துத்
தானிருக்கவிப்பிரகுலத்து முண்டையும்வந்து
தான்கலைத்த துரைத்துசேர்த்து
தம்புடனிருக்கவில்லி புத்தூராரிடஞ்
சென்றெங்கும் பரிசுபெற்றச்
சிங்கமெனவநந்தகவி புலவன்வரப்பரிக்ஷித்துச்
செய்கவிக்குச் சந்தமீய
சம்பிரமதாய்ச்செய்யப் பிழைகண்டுகாதறுக்கத்
தானேகவநந்தக் கவிஞன்
ஞானந்துணிந்தாதிசேடன் றனக்குச்செவியுமிலை
தானறியு மென்றுநவில

வெம்பிச்சொலுமிவன் சமத்தையறிந்தங்குவிடுத்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (73)

ஈதுநிகழ்ந்தங்கிருக்க வடதிசைக்கச்சிநக
ரிருக்கும்வைணவ ரொருவரு
மேகியாத்திரைவந்து வில்லிநகரிறைவனை
யேற்றியவர் சார்வபௌமர்
ஓதரியசிறப்பைக்கேட் டிவரிலமெய்திக்காண
வுடைவாளங் கருகிருக்க
வுவந்தறிந்தீதேதுக்கெனக் கவிஞருரைபிழைகாண
வோங்கிச்செவி கொய்வதற்கிங்
காதரமீதென்றுசொலவவர் கேட்டங்கருணகிரி
யதிலருணை கிரிப்புலவனு
மவனிருக்கதேவரீர் வாதுசெயவெழுந்தருள
வாகுமோ வென்றுகேட்க
வேதனையிராமற்செல வாருமென்றழைத்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (74)

சொல்லுரையறிந்திவரு மியாத்திரைசெல்பவன்
சூட்டியெமை விட்டுநீருஞ்
சுகமுடன்செல்லுமென் றிவரும்புகன்றங்ககலத்
துரைவில்நந் நாளைப்பார்த்துச்
செல்லவேசதுரங்க சேனைபலசூழ்ந்திடச்
சீர்வழியிற் சகுனமாருய்
சிந்திக்கச்செல்பவர்க ளுளமறிந்தங்குடன்போகத்
திருவண்ணமலை நகரமாள்

நல்லபிரபுடதேவனெனு மரசனிடமமைச்சர்
நாடியிதைப் போயுரைக்க
நளினமுடன்வில்லிபுத்தூ ரரும்வேந்தனிட
நற்சமுகங் கண்டுநோக்கி
வெல்லுங்கவிச்சிங்கமென விருதுடன்விளங்கினர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (75)

கரியும்பரிப்பல்லக்குக் குடைசுருட்டிசாமரங்
காளாஞ்சி துறடுமுதலாய்
கனவிருதுமன்னவர்களிடம் பெற்றிவ்வுலகெலாங்
கவிச்சக்ர வர்த்தியென்றும்
பெருகிவந்திருப்பவரைப் பார்த்தரசன்வியப்புற்று
பேணிநமஸ் கரித்துவரிசைப்
பிரபலமதாயீயப்பெற் றிங்குளபுலவனிடம்
பிரீதியுடன ரர்க்கஞ்செய்யத்
தெரிந்திங்குவந்தனமென் றுரைக்கக்கேட்டிறைவனு
தியக்கங்கொள வவர்சென்றபின் [ங்
சீர்பெருகத்தமதுபுலவரைப் பார்த்துநமதுநகர்
செப்புந்துறவிக் கவிஞனு
விரிந்துலவுமிருவரினு மெவர்திறமென்றறிந்தனன்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (76)

அரனைக்கேட்டிங்குவந் திடும்வில்லியும்மருணை
கிரிப்புலவ னிருவர்தாமு
மாசுகவிப்புலவரிவர் திறமறியதெய்வச்செய
லாகுமேயன்றி யானுஞ்

சதிருட னுரைக்கத்தர மன்றெனச்சொலயிறைவன்
சார்ந்துநஞ் சேதிமெயன்ன
தானுஞ்சொலுமெனவிவ னென்னவிமாகமலையவர்ச
டானுகு மென்றுகூற
கதியறிந்தவ்வேந்தன் றுறவிக்கவிஞர்க்கிதையோதி
கருத்தியென் னுலாகிடுங்
காரியமிருக்கிலதைக் கழறுமெனவிடுக்கவிவன்
கண்டுகொண் டறுமுகர்க்கு
வீதமுடன்பூசைக்குறியன செயவும்நடுநிலையும்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (77)

வந்தவர்களுரையைக்கேட் டரசனதுபோற்செய்ய
வருணைகிரிப்புலவ னென்போன்
வகையிருக்கவில்லிபுத்தூ ரர்க்குத்தூதனுப்ப
வரவிவரைப் பார்த்தபேர்கள்
சிந்தைகளித்தெல்லோரும் வணங்கவிவர்வீற்றிருந்து
சீர்சந்தம் பாடுமென்று
செப்பிச்சிறத்துறவிக்கவி ஞன்பொறுமெனவுரைத்து
திகழ்விகட பரிமளவெனும் [த்
அந்தமுளசவிக்குமரி யிடியைப்போற்பாடவிவ
ரடைப்பைக் காரனும்நம்பிட
மறியுங்கவியீதென்றுரைத்திட விருவர்க்கங்குசம

விந்தையுடனொருவர்கவி சொலவொருவருரைசெயவு
வேண்டியே திருவள்ளூர்வாழ் [ம்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (78)

## வீரராகவசதகம்.

அரசனுரைப்படியருணைகிரிப்புலவன்கந்தனந்
தாதிசெயவைம்பத்தொருமூன்
ருகவவன்வாய்மூடுமுன் னிவருமுரைசெய்ய
வதனைக்கண்டங் கறுமுகவனைக்
கருதிமலையைப்பார்த் திளக்துதிக்கத்திதித்தக்
கவியும்வர விவர்மயங்கக்
காசினியையாள்பவனு மிவர்செவியைக்கொய்யுமெனக்
கல்விக்கட லென்றுபாடச்
சரசமுடனவரிவருந் தழுவித்துறவெடுத்துவிட்டுத்
தாவியே நேயமாகித்
தன்பதியில்வந்துதுறவுற்றுச் செருக்கொழிந்துபின்
ருனிருந்து வீடுகொண்ட
விரகமுருமிச்சரிதை புவியறியவோதினேன்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வெலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (79)

## பிள்ளைப்பெருமாளையங்கார் சரித்திரம்.

பெருகுந்திருமதுரைத்திரு மலைநாய்க்கரிடபிராய்சம்
பிள்ளைப்பெருமா ளைய்யங்கார்
பெயருடையதிவ்யகவியமர்ந் தரங்கனைத்துதித்துப்
பெருகியவ ரிருக்கநாளுந்
கருதியிங்கரங்கந்தனிற் றிருத்தேரிலையனுங்
கடிகியோ லக்கம்வரவுங்
கல்லினிடந்தேருழியேறி நிற்கத்திருத்தேர்
கட்டிடுங் கனசிலையும்
அருகமருந்தீவத்தியதில் விழத்தீப்பிடிக்க
வங்குதென் மதுரைவிகித
ரய்யங்காரவர்கிருஷ்ண கிருஷ்ணவெனத்தன்றான்ச
யறிந்தங்கு தேய்க்கவிவிடம்

விரையமன்றித்திருத்தேர்வர வரங்கன்கோவில்கொள
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (80)

சுற்றியங்குள்ளவர்க ளிதையறிந்தங்கிவருக்குத்
தோணிப்பித் ததுவுமாந்திச்
சூட்டிவந்தெய்தவித மறிந்திலோமியாமுணரச்
சொல்லுமென் றிவரைக்கேட்கப்
பற்றிமேல்நடந்தகதையை யுரைக்கப்பலர்மகிழ்ந்து
பாரரசன்நாய்க்க ரிடம்போய்ப்
பாங்குடன்வரையவவர்கேட் டய்யங்காரவரைப்
பார்த்தழைத்தங் கியாதுரைப்பான்
நற்றவம்போலரங்க நகரேகரீரிவ்விடம்
நவிலச்சிலர் நடந்ததென்ன
நாடியுரையெனவிவரும் நான்செல்லவிலையவிடம்
நடந்ததையங் குரையதுசெய
வெற்றித்தர்வேந்தனிட முற்றதிதுமெய்யென்றனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (81)

எல்லோருமுரையுமிவ ருரையும்பத்தியறிந்தரச
னெய்தியகன் றிருந்தபின்னர்
யேகிச்சிலதினங்கழித்தங் கிறைவன்வந்தய்யங்கா
ரிணையடியைத் தெண்டனிட்டு
நல்லரணஞ்சென் றுதிரு மலைநாய்க்கர்துயிலரா
நாடிச்சீரங்கஞ்செல்ல
நயருந்திருக்காவேரிதனி லரங்கதாஸரவர்
நன்குதீர்த் தங்களாடித்

தொல்லைவினைதீர்க்க வரங்கனைப்பார்க்கவிவர்காண
நாடோர்ந்திவரு மவருஞ்சேர்ந்து
தப்பனடிபோற்றியகிழ்ந் தவரவிவரகலத்
தோணியிவர் கனவுகண்டு
வில்லையென்பதையறி யவிழித்தப்பார்த்திருந்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (82)

போதகயங்கண்டரசன் மணவாளதாஸரிடம்
போந்தவந் திவரைநோக்கிப்
பொன்னடியைப்பணிந்திறைவ னபசாரஞ்செய்தமை
பொறுத்தெ னொருங்காரியம் [மை
நீதியுடன்நிகழ்த்திடவப்படிச்செய்வேனென் றுரைக்க
நேர்ந்திருவரு மரங்கவாசம்
நிமலன்றிடசேவைதீர்த்தப் பிரசாதமுதவ
நீரெமக்கருளீரென
ராசகமுடன்கேட்டு நாய்க்கரதுபோற்செய்யத்
தானரங்க மெய்திவிடலன்
றன்பேரிற்கவிபாடிதிவ்ய கவியிள்ளைபெருமா
ளையங்கா ரெனப்பலர்
வேதனைபிராமற்சொல கீர்த்திபெற்றிங்கிருந்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (83)

சாலவும்றிந்திதனை யானைக்காவலில்வசிக்குஞ்
சைவர்கடம் கடவுள்பேரிற்
றுக்கியோர்கவிதைபெற வேண்டுமெனவந்தறைய
ஞானிவர் தடுக்கவேகிக்

காலமறிந்தவர்களாவைப் பிடித்தங்கொளிக்கவுங்
கருதிவிடக் கடவுள்பெயரைக்
கனிவுடன்சொலவிடுவோ மென்றுசொலவிவர்சென்
களர்மங்கை பாகனெனவும் [வா
சீலமுடன்செய்கபிலையை விடுக்கப்பரத்துவஞ்
சிவனுக்கிலை யென்றுசாற்றச்
செய்தியறிந்தவர்கேட்டுத் தர்க்கிக்கவிவர்பனிமை
தினகரன் விலக்குமாபோற்
வேலைசெய்திவரரங்க மதனில்வந்திருந்தனர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (84)

செய்யுங்கவியரங்கனல்லாது வேறொருவரைச்
செய்வதிலையென வைராக்யஞ்
சித்தமிசையிருக்கத்திரு வேங்கடமுடையானுஞ்
சீர்கனவிற் றோன்றிநீரும்
உய்யவேநம்பேரிற்கவி பாடுமென்றுரைக்க
வுய்த்தறிந்திவர் கேட்டுநா
மோங்குமரங்கனைப்பாடும் வாயினாற்மற்கடமந்
துற்றதது பாடோமென
வையச்சொலகேட்டவருங் கண்டமாலைகளாக்கப்
பாவினால் நிவர்த்திசெய்யப்
பார்த்தரங்கன்சாதிக்கவிவர் செய்யவுரைபோற்புகு
வார்ப்பரம பதமதுபுக
வெய்யவனுலவுப்புவிக்கிச் சரிதையோதினேன்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (85)

## சாகரம்.

சாதகமுடன்காட்டில் செல்லுமொருவனைப்புலி
 தான்றுறத்தப் பயந்து
சாவியிவனோடியவ்விட முறுமோர்பாழுறவு
 தனிலறுகம் வேரைப்பற்றிப்
போதவேதொங்கிட வுங்கிணரடியிருந்தரவு
 போந்திவனை சீறிக்கொத்தப்
பொங்கிவரக்கீழ்சர்ப்ப மேற்போகப்புலிதுறத்தப்
 பொல்லாங்கிலகப் பட்டுவீண்
லாதனையடைந்திவனிருக்க வறுகம்வேரை
 வனெந்தெலி யுமங்கறுக்க
வப்போதுவங்குளதே னடையிலோர்துளியிவன்
 வாயில்விழ மகிழ்ந்துபின்னுற்
வேதனையைமறந்தனன் சாகரமீதென்பர்காண்
 வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
 வீரராகவ மெய்யனே. (86)

## பெண்களிடமுண்மையுரைக்கலாகாதென் பதைப்பேணிக்காட்டுமோர்கதை.

பதிவுபெருமோரூரிற் வாழ்குடிகளிருவரிற்
 பயிரிலொல்லிரோ தஞ்செய்துப்
பாங்குடனொருவனைமற்றவன் வெட்டப்புவிமதியைப்
 பார்த்துரைத்தவ னிறந்தபின்
சதிருடன்கொன்றவன்பின் ற்னிலம்வந்தயர்ந்திறவி
 ருன்மதியைப் பார்த்துசிரிக்கத் [ற்
தாவியிவனில்லாளுமுரை யெனவிதைச்சொலவுந்
 தன்னில்ப்பின் சண்டைநேர

முதிரவிவன்பெண்டீரைப் புடைக்கவவள்கூகூவென
முன்கதையைச் சொல்லியழுக
முடிகிவெகுகூட்டம்வந் தறிந்திவனைமோதியும்
முனைந்தரசன் கழுவேற்றவும்
விதியும்வரப்பெண்களிட முள்ளதுரையாதென்பர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (87)

## பகவத்பக்தியினாலுண்டாகும்பலனைக்காட்டு மோர்கதை.

காசினியையாள்வேந்த னிடமறையவர் தினங்
கண்டுஞ் சவர்த்திசெய்து
கடிகிவரவசர்க்குப்பிணி யகலவகலவதற்
கனதனம்பூசி னிதனிற்
நேசமுடன்வைத்திவருக் காடைதனமதையீய
நேர்ந்தெடுத் ததைசுமக்கா
நேருமாவணஞ்செட்டியிடம் விற்றுசெலவிறகு
நேர்கொள் பாகவதர்வந்து
பூசினியைவாங்கதனமுற கைங்கர்யஞ்செய்து
புரமிருக்க வேதியர்வந்து
நுமன்னனைப்பார்த்துக் குசலமறிந்தியாவரையும்
போந்தழைத் தரியினருளால்
சிவபதம்பெற்றக்கதையிதுவுமென்பர்காண்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (88)

## வித்வான்களினுடையசெயலைவிளக்கிக் காட்டுமோர்கதை.

அம்புவியில்வித்தைக்கு மூலதனமாயுள்ள
　　வளவைப்ரசங்கஞ் செய்தாங்
கடவிதனில்வரவெயிற்கண் டங்குள்ளநாவமரத்
　　தமர்ந்தபின்மேற் சிறுவன்காணத்
தம்பிசிலபழம்போடெனச் சுட்டதுஞ்சுடாததுந்
　　தானுளசுடா தென்னவுந்
தானுமணலெறியவெடுத் தூதசிறுவன்சிரிக்கத்
　　தான்கலங்கி வறிந்துசெல்லச்
சம்பிரமதாகமுன்னோர் செயலையறியாமற்
　　றரிற்கவிப் புலவரென்றுந்
தன்சமர்த்துங்கல்வியின் சமர்த்துஞ்சேர்த்துத்
　　தங்கள்வயர் பிழைப்பர்கண்டாய்
வெம்பிமனதயர்ந்துனது பதமலரைப்போற்றினேன்
　　வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
　　வீரராகவ மெய்யனே. (89)

## பிறவித்துன்படம்.

எழும்புக்கையானைவரை யுளஜீவராசிக
　　ளெண்பத்தி நான்குலட்ச
மிப்பதியிலாண்பெண்ணென் றிருவகைசெய்திவருக்
　　கின்பமுடன் மோகமூட்டிக்
குழம்புகொண்டிருவருஞ் சேர்ந்துப்புணர்ந்திடக்
　　கூசாமல் யோநிவழியாய்க்
குவலயந்தனில்வரவதைப் பார்க்கவதினுறக்
　　குடிகொண்ட விடத்திற்புகத்

துரும்புபோல்யோநி வழியாய்வரயித்தேகமுந்
தோலெலும் பிறைச்சிரத்தந்
தூர்நாற்றங்கொண்டயித் தேகத்தாலுந்தனைத்
துதிக்கவுங் கூசுதையோ
வெறும்பனெனையிதைநீக்கிவேறுசெயல்செயவரிதோ
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (90)

## காமத்தால் வருமிழிவு.

மங்கையர்கள்யோநிமிசை தேன்ஜீனிசக்கரைபால்
மதுரமதிருக் கின்றதா
மதிமூத்திரங்குருதிசீழ் வேர்வைசுரோணிதம்
மாசூடுதூர்க் கந்தமுஞ்
சங்கையற்றிருக்கவிது கலையறிந்தறியாமற்
றனமீந்துகுந்தி வழியைத்
தான்பார்த்துத்தூதுவிட்டுக் கனவிலுருபார்த்துத்
தானுஞ்சுவ ரேறிவீழ்ந்து
வங்கணம்பேசியவள் காலில்விழயிக்களவை
வறிந்துசெறுப் பாலடிக்க
வையையோவாங்கியே மூத்திரக்குழியினுற்
வந்ததிது போருமென்று
வெங்கரெவர்களுமினியார் மோகத்திலேமடிவர்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (91)

## விரைக்க நாள்.

நல்லரோகணியாதிரை பூசமூத்திரம்
நயருத்திராட மோனம்
நாடுமவிட்டஞ்சதய மூத்திரட்டாதிதனில்
நஞ்சைநடவுக்கு நன்ரும்

சொல்லிடும்பரணிகிர்த்திகை யாயல்யமகஞ்
சூட்டும்பூரம் விசாகஞ்
சுடர்மூலம்பூராடம் பூரட்டாதியிதனிற்
ரோணிக்கிழங் கிடவும்நன்றும்
அல்லவிலையகவனியு மிருகசீரிடமஸ்த
மானசித் திரைசுவாதி
யநுடங்கேட்டைரேவதி யில்பயிறுகாய்தான்ய
மாமிதைச்செய்ய நன்றும்
வில்லங்கமிலையிதனிற் விரைக்கமிகநன்மையாம்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (92)

## வாரவிசேஷமதின் குணம் நிறமறிய விவரம்.

பீடறுக்கனுத்யோகஞ்செய்ய மதிவிதைவிதைக்கப்
போர்செவ்வாய் புதன்வித்தையாம்
புகழ்குருவிற்மணஞ்செய்ய வெள்ளிமயிர்கழிக்கச்சனி
பொருந்துந்தவ மதிவியாழம்
தேடியசாத்மீகமாயவெள்ளி செம்பொன்னுந்
திகழ்ந்திடுமிராட் சதம்புதன்
சீருள்ளஞாயர்சனி தாமதம்புந்திகுரு
செயும்வெள்ளிக் கிருகண்ணுமாம்
காடறியவேஞாயர்திங்க ளுக்கோர்கண்ணுமாம்
நவர்செவ்வாய் சனிகுருடுமாம்
நாடிவாரத்தின்பலனதின் குணமும்நிறமறிய
நயந்துரைத்ததறி வீர்கள்காண்
வீடணனேக்கார்த்தசிரஞ் சிவீயளித்தாண்டவனே
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (93)

## நாள்பலனறியவிவரம்.

ஒருகார்த்திகையு முத்திரமுத்ராடமுங்
கிளருமிது காலற்றதாங்
சேருவருமிருகசீரிடஞ் சித்திரையவிட்டங்
கேண்மைபுட னுடலற்றதாம்
சட்டமுடனே புனர்பூசம் விசாகம்பூரட்
டாதியிது தலையற்றதாஞ்
சாதுமிவ்வொன்பதுள நாளிற்பெண்களைக்கூடிற
முறுமலட்டா மனையதுந்
திட்டமுடன்கோலிலது நாசமாமியாத்திரையுஞ்
செய்யத்திரும்பா தாகுமாந்
தேடியிதையுலகோர்க்குத் தெரியமுன்னோருமிதைச்
செப்பினாரறி வீர்கள்காண்
வெட்டவெளிதனிலுள விப்பரவிடுமென்னிட்டனே
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (94)

## வியாதிகண்டநட்சத்திரநாள்பலன்.

சேதம்வருஞ்சோதியொடு சதயமுப்பூரமுஞ்
சேருமாயில்யங் கேட்டைச்
சிரக்குடம்பரணியாதிரை நட்சத்திரஞ்செவ்வாய்
சனியருக் கன்றினமும்
சாதகமுமில்லநவமி துவாதசிசதுர்த்தி
சஷ்டிதிதி யென்னுமிதுவுஞ்
சரியாகவநதொன்றாய்க் கூடவிதிற்பூமாந்தர்
சார்ந்துபிணி கொள்வாராகிற்
போதவேபண்டிதர்கள் குட்டிக்கரணம்போட்டுப்
புரட்டிப்புரட் டிதைப்பார்க்கினும்
பொல்லாங்குவரவிவர்கள் சொல்லாமலோடப்பின்
பிரமன்வந்திதைப் பொறுக்கினும்

வேதனையேயல்லாதவிவர்கள் பிழையார்கள்காண்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (95)

## கிரஹப்பிரவேசஞ்செய்ய வாகாதமாதம்.

பரிந்தாடித்திங்களி லிராவணன்பட்டதாம்
பாரதம்மார் கழியதாம்
பாங்குடன்புரட்டாசி யிரணியன்மாண்டதாம்
பரனஞ்சுண்டது மாசியாம்
தெரிந்திடக்காமனுமெறிந் ததுபங்குனியதாந்
தேடிபலி முடிவானியாந்
திட்டமுடன்ஞரி னுளமாந்தர் புதுமனையிதனிற்
றேடியவர் குடியதுபுக
அரிந்திடவுமவர்கள் வாழ்வதுவுமிகக்குன்றியே
வாங்கவருங் கையிலோட்டை
யவர்கள்கொண்டிறந் துன்பராமிதுவுமுன்னோ
ரறைந்தமொழி யறிவீர்கள்காண்
விரிந்துலவுநின்பதத்தைப் புரிந்தடியேன்போற்றக்காண்
வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
வீரராகவ மெய்யனே. (96)

## ஊ ழ் வ லி.

பிரமனுக்குத்தலைகுறை வுண்டுசிவனுக்குப்
புகழ்கண்டம் விடமுமுண்டு
புகழ்மதிக்குற்றவுட னூனமுண்டிரவிக்குப்
பேசும்பற்கு றைவுமுண்டு
திரமுற்றவிந்திரர்க் கங்கமதுகுறைவுண்டு
சீரருணர்காற் குறைவுண்டு
திகழுமந்தகர்தமக்குப் புழுக்காலுண்டு
திரையப்பில் நரையுமுண்டு
உரமுற்றவலிமையுள மாபெரியோர்களுமிங்
கூழ்கொண்டு வாழ்தலாலே

புலக்குற்றமாந்தர்கடன் வினையைக்கடந்திட
 வொருக்காலு மாகாதுகாண்
விரகரெவருமகிழத் திருவளருமார்பனே
 வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
 வீரராகவ மெய்யனே. (97)

## தூங்கிவிழித்தவுடன்பார்க்கத்தக்க வஸ்துக்களாவன.

பள்ளியிலிருந்துவிழித் தெழுந்தவுடனுதயத்திற்
 பார்ப்பதிங்கென்ன வென்னில்
பரிவுடன்றாமரைப் பூகனகதீபமும்
 பாங்குபெரு கண்ணாடியுந்
துள்ளியோடும்பசுதி தீயுஞ்செஞ்சந்தனந்
 துலங்குகடல் செந்நெல்வயலுந்
தொட்டுதிருமங்கிலியங் கட்டினதன்பத்தினி
 துளைக்கருவி மிருதங்கமும்
அள்ளிபுவிக்கதுபெய்பு முகில்வரையுங்கடவுளுரு
 வானதனதுட வலக்கையு
மாவின்றகன்றுடனீதொன் றேனும்பார்க்கவிவை
 யதிநன்மையுண் டென்பர்காண்
வெள்ளியவனுந்தடுக்க விழியைப்போக்கினவனே
 வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருள்செய்யெனதையனே
 வீரராகவ மெய்யனே. (98)

## பெண்கள் சிறப்பு.

வதனமதைமதியென்றும் நீள்புருவம்வில்லென்றும்
 வாயிதழ் பவளமென்றும்
வரிசைப்பல்முத்தென்று மிருவிழியைவண்டென்றும்
 வாயெச்சில முர்தமென்றும்
இதழுலையைவரையென்றும் வயிறையாலிலையென்று
 மிருகரம் நாணியென்று

மிசைதொப்பூள் சுழியென்றுங் குடைவாழைத்தண்டெ-
 மிடைதனை யுடுக்கையென்றுங் [னாறு
சதவுநடை யானமென்றுங் கண்ணிமையைவலையென்று
 காவுரிசைகுயிற் குரலென்றுங் [ய
கூந்தமலாமடந்தையிவ ளென்றுமிரதியென்றும்மா
 கனாமடை யிவளென்றுமே [ன
விதமாகப்புவர்கன்னியரைப் பேசினார்கள்காண
 வேண்டியே திருவள்ளூர்வாழ்
வேலையிற்றுயிலவெழுந் தருளசெய்யெனதையனே
 வீரராகவ மெய்யனே. (99)

## இந்நூற்செய்தகாலம்

நீடுங்கலியையாயிரத் தொன்பதில்வருடம
 விரைசீலகஞ சித்திரை
நிகழமாதநதேதி யீ நபத்திரண்டுமதிவாரம்
 சேர்ந்திடுந் திதிசதுர்த்தி
நாடுமுயாநட்சத்திர மிருகசீரிடம்யோகம
 நற்சுகாமம் கரணமவனசம
நல்லதொ நபூரவபட்சந சுபயோகமிவை
 நனினமுடன கூடியதினந
தேடிமுயர்திருவள்ளூர வீரராகவசதகஞ
 செய்துமுடித் திதையடியனுஞ
சீர்பெறுகவச்சிலிட்டு குருளோரக்கிநதுகண
 சீரத்திபெற விடுத்தபினறற்
வீடுபெறச்செய்யவிதை வாங்கிவாசித்தவர்கள
 விருப்பமுடன் கேட்டபேர்கள்
மேதினியிலெஞ்ஞான்றும் பிணியன்றிபெருவாழ்வு
 மேன்மையுட னினிவாழ்வரே. (100)

திருவள்ளூர்,

**வீரராகவசதகம்.**

**ஸம்பூரணம்.**

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வெண்மணி

நாராயணபாரதியாரால் செய்யப்பட்ட

மணவாள நாராயணசதகம் என்னும்

# திருவேங்கட சதகம்.



சி. வே. துரைசாமி முதலியார்

அவர்களது

சென்னை சூளை

பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1923. அணா 2.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வெண்மணி

நாராயணபாரதியாரால் செய்யப்பட்ட

மணவாள நாராயணசதகம் என்னும்

# திருவேங்கட சதகம்.

இஃது

கோகுலாபுரம்,

அருணாஜலமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டபிரதிக்கிணங்க


தி. இரத்தினமுதலியார்.

அண்டுஸன் அவர்களாற்றமது

சென்னை

கலைக்கியானமுத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1923.


இதன்விலை அணா 2



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

மணவாளநாராயணசதகம் என்னும்

# திருவேங்கடசதகம்.



## காப்பு.

செந்திருவாழ் மார்பன் றிருவேங்கடசதகம்
பைந்தமிழா னீதிநெறி பாடவே—வந்தருளும்
கார்முகமஞ் சங்கத்தான் கைத்தா மரையணிந்த
கார்முகமஞ் சங்கத்தான் காப்பு.

## தனியன்.

ஒக்குதண்டலைசூழ மேகமனைதேன்சொரியு
மோமலூர் வெங்கைபூப
னுதவுமணவாளநா ராயணன்களமூரி
னுலகநீதிக் கேட்கமுன்
தெங்குநீர்வயல்சூழும் வெண்மணியில்வாழுமுயர்
செல்வன்முத் தாரையனோர்
செழுந்தவமுதித்தநா ராயணப்பாரதித்
திருவேங்கடச் சதகமே
பாங்குபெறுமுலகுளோர்க் கிருகண்பணியகனிருட்
பானுவிரு வழிவிழியதாம்
பவக்கடல்கடக்கவரு வங்கமாம்பொங்குமொழி
பரவுமெய்ஞ் ஞானவழியாம்
இங்கிதபாத்துணைய தாமிதைப்படிப்பவர்க
ளியல்வேங்க டேசரன்ற
னிசையருளையுற் றுநல மேபெருகிவாழுமவ
ரேழுபொன்மலை போல்வாழ்வரே.

நூல்,

## கடவுள்வாழ்த்து.

பூமேவுதிசைமுகனை யுந்திதனிலீன்றதும்
புகிதிவே தாகமமெலாம்
புருஷோத்தமன்றெய்வ மென்பதும்பூசுரர்கள்
புரியுமந் திரகருமமும்
தேமேவுமலர்மங்கை மார்பில்வளர்சீருஞ்
செகந்தனைக் காத்தருள்வதுந்
தேவர்முதன்மிர்கசெந்து பட்சிசிலைமரமுஞ்
செழிக்கப் பதந்தருவதும்
பாமேவுபொருளலங்காரஞ் சிறப்பதும்
பலவிதமு நீயென்றதாற்
பரதெய்வமுண்டென் றிருப்பார்களென்னூல்
படித்தவிதமோ தெரிகிலேன்
மாமேவுபைந்துளப மாலையணிமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## அந்தணர்சிறப்பு.

சீலமிகுமாகம புராணமனுநீதியுந்
தேர்ந்துமெய்ஞ் ஞானநிறைவார்
செய்கின்றயாகாதி மந்தரகருமங்களாற்
றேவர்க்கு முதவிசெய்வார்
காலமுதலாகிய ப்ரமாணங்களங்கையிற்
கனிபோல வேகாட்டுவார்
காயத்ரிமகிமையாற் சகலதீவினைகளுங்
கனவிட்ட பஞ்சுசெய்வார்
ஞாலமிசைதிங்கண்மும் மாரியுங்கொற்றவர்
நடாத்துசெங் கோல்வளமையு
நாடுகள்செழிப்பதுஞ் சகலதருமமும்வேத
நாயகர் மகத்துவங்காண்

# திருவேங்கடசதகம்.

வாலகருடன்பண்டு கண்டகதையல்லவோ
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## அரசர்சிறப்பு

சீருலவுமனுநீதி மந்திரிசொறன்புத்தி
தேசத் தியற்கைநான்குஞ்
சேர்ந்துசெவிவிழிமனது மூன்றினும்பொருமை
சேர்ந்துசெங் கோல்செலுத்தித்
தாருலவுகமலமுங் குமுதமுங்காலங்கள்
சார்ந்துமலர் கின்றவிதமுந்
தந்தியொடுமுதலைபொரு நான்பலமுங்கண்டு
தரிபலரை வெற்றிகொண்டு
பாருலவுசெடிசேனை தனதானியஞ்சகல
பாக்கியமு மிகவிளங்கப்
பற்பலதன்மங்களோடு கீர்த்திப்ரதாபம்
படைத்திற லோனரசனும்
வாருலவுதனமங்கை மனமகிழுநாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## வணிகர்சிறப்பு

திடமுடன்றன்மன தறிந்துவாணிபமே
செய்வரா தாயமிஞ்சிச்
செலவுசெய்யார்யாவர் வருகினுங்கண்டபடி
தேர்ந்துவிலை போலுரைப்பார்
அடகுதந்தாலுமரி யாதையில்லாருக்
கரைக்காசு கடனுமுதவா
ரானமனுநீதியுடை யோர்களுரைவாய்மையா
ளளவிலாப் பொருள்கொடுப்பார்

# திருவேங்கடசதகம்.

கடுகுதனிலெட்டிலொரு கூறுவரவெனினுங்
கனாக்குமுறை தன்னில்வருவார்
காரியவிசேஷமதி லொருகோடியுதவுவார்
கருணைவர்த்தகர்பெருமைகாண்
வடமலைதினம்பரவு தென்மலைக்கதிபனை
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## வேளாளர்சிறப்பு

அந்தணர்கள்கருமமுஞ் சகராசர்புசபலமு
மவனிவர்த்தக லாபமு
மனவாக்குமேன்மையுந் தருமமுந்தானமும்
மன்புமுங் கையரின்பமும்
புத்திதெளிவியமமுஞ் சாத்திரமுமாகம
புராணமொடு சகலகலையும்
பொய்யாதவுண்மையுங் கீர்த்திப்ரதாபமும்
புகழுகின்ற தேவர்நிலையும்
வித்தைதபரிமாணமுங் குலமரபுநீதியும்
விதரணை முதற்சகலமும்
வேளாளர்குவளைபுனை காராளர் தங்களுடை
மேழியின் பெருமையன்றோ
மத்தாமெனும்புய சவுந்தரமுகுந்தனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## புருஷராய்ப்பிறந்தோர் பெரும்பயன்

புருஷராய்ச்சனனமெடுத்தபேர்மெய்ஞ்ஞான
போதத்தை யறிவதொன்று
பூமியாடமிச்சதன வாளுவதொன்றலது
பூவலஞ் செய்வதொன்று

## திருவேங்கடசதகம்.

தருமவானென்றுமிகு கீர்த்தியானென்றுநற்
சற்குண விவேகியென்று
சகலருங்புகழ்கின்ற வித்துவானென்றுரண
சங்க்ராம வீரனென்று
கருணைசேரிங்கவசனை யில்லாதமனிதரைக்
காசினியி லேன்படைத்தாய்
கருதுதாயுதரமும் பார்க்கின்றபேர்களிரு
கண்களுந் செய்தவினையோ
பருவலாளியதுளப மாலையணிமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

### நகரச்சிறப்பு

பரதேசப்பல வேசியர்களாடலும்
பாடலும் பெருகோயிலும்
பல்வாவிமண்டபங் கோட்டையரணங்களோடு
பலர்மேவு கடைவீதியும்
இரதகஜதுரகப்ப தாதிசதுரங்கபல
மேர்கின்ற தளகர்த்தரு
மெண்ணமிருமந்திரிப்ர தானிதாருபதிய
ரியலுத்தி யோகசனமும்
விரதமறையோராதி நாற்குலமுமொன்றென்று
மிக்கசோடச தானமு
மேலாய்ச்சமீபித்த நதியுமாய்மருநீதி
வேந்தனும் பெருபட்டணம்
வரதருறைசீரங்க பட்டணமெனச்சொல்வர்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராய

## அரசர்க்குரியதொழிலாளரியல்பு

காரியாகாரியங் கொற்றவர்தெரிந்திடக்
கண்டுசொல் வோன்மந்திரி
காலமுந்தன்பலமு மெண்ணியிகல்வென்றிடக்
கருதுவோன் றளகர்த்தனும்
சீரியதனங்களொடு ராச்சியஞ்சகலமுந்
திட்டமிடுவோன் ப்ரதானி
செய்யவாசகதாட்டி யவதானவக்கணை
சிறக்குமவ னேராயசன்
சூரியன்றிசைமாறி னுந்தான்றொடுத்தவத்
தொகைவிடான் கருணீகனாந்
சொல்வன்மைசபைவன்மைபராசர்வன்மைதெ
கமுடனே தூதுபதி
மாரியதுகாத்தருளு மணிமேகவண்ணனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## இதனாலிஃதுளதாமெனல்

அதிகாரமதுவந்து சேரிலெவருக்குமே
யதிகவல் லமைகளுண்டா
மாடையாபரணங்கள் சேரிலெவருக்குமே
யழகுபெறு வளமையுண்டாம்
நிதிமேவுசெல்வது சேரிலெவருக்குமே
நிறைகின்ற மேன்மையுண்டாம்
நெஞ்சமகிழ்விதரணஞ் சேரிலெவருக்குமே
நிலைபெற்ற கீர்த்தியுண்டாம்
துதிமேவுபத்தியது சேரிலெவருக்குமே
தோன்றவரு தெய்வமுண்டாஞ்
சுகமிக்கபருவமது சேரிலெவருக்குமே
துய்யமண வாசையுண்டாம்

மதிசேரிலங்குமுத மலராதிருக்குமோ
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௬௦

## அரசரிடத்துப் பெறத்தகும் வரிசைகள்.

சுற்றமொடுதானுகம் பினபேருமின்பமாய்ச்
சுகமுறிற் புரவியமையுந்
துய்யதருமங்களொடு கீர்த்திப்ரதாபந்
துலங்கினுற் சிவிகையமையும்
கொற்றவர்கண்மெச்சவே பரராசர்கெடிவெற்றி
கொண்டுவரி லானையமையுங்
குறையொன்றிலாமனிறை புகழ்பெற்றவீரர்முன்
கூறுங்கை வாளமமையும்
உற்றவகையிவையெலாம் வேந்தர்சன்மானமுட
னுதவாமலே பெற்றிட
னுறைகொண்டநாடகந் தன்னில்வருகோலமுட
னூர்வலஞ் செய்கோலமும்
மற்றவர்கள்கோலமுஞ் சரியென்றுசொல்வர்காண்
மணவாள நாராயணன
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௰

## பிதுர்வாக்கிய பரிபாலன முதலியவற்றால் வருநன்மை.

தந்தைதாய்வாக்ய பரிபாலனம்புரிவதுந்
தான்சொன்ன படிசெய்வதுந்
தவறுதவிரதமும் பொய்யாவசனமுந்
தானமுங் கனபொறுமையும்
சிந்தைமகிழ்மரபினோர் செய்தொழின்முடிப்பதுந்
தேவதா விசுவாசமுஞ்
செய்ததோர்பாசுரா மன்கவசகுண்டலன்
செயராம ஞெடுவீடுமன்

அந்தமிகுசொல்லரிச் சந்திரன்மாபலி
யடறரும னுடுபகிரத
னருளபிரகலாதனிவர் போற்பெருங்கீர்த்தியொடு
மவனிமிசை நீடுவாழ்வார்
வந்தமரர்போற்றவளர் சேஷகிரிவாசனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௧௧

## சூதுமுதலியவற்றால் வருந்தீமை

சூதுபொருவித்தையும் பரதாரமோகமுஞ்
சோதரன் றனையிகழ்வதுந்
துலங்காதபுத்தியு மடங்காதவார்த்தையுஞ்
சொல்லிச்செயாததிறமும்
தீதுபொருவஞ்சமு மதங்களும்பிறருடைய
திரவியந் தனிலாசையுஞ்
சிந்தையகமெனுமகங் காரமும்பெற்றபேர்
சீர்நளன் கீசகன்றனை
மீதுபொருவாலிசக ரன்குமரன்சிசுபாலன்
வென்றியுக் கரன்வில்வலன்
வித்தைபொருதுரியோத னன்றனகன்முன்பெற்ற
விதமுற்றிருப்பர் கண்டாய்
மாதுபெறுதானவரை போதுமொருதிகிரியாய்
மணவாள நாராயணன்
மனதிலுறைபலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௧௨

## சாதிமுதலானவைகளின் குணமே
## சிறந்ததெனல்.

தடவரையசன்மீது விளைபிலுஞ்சோளமது
சன்னசம் பாவாகுமோ
சந்தமுப்பாடா திருந்தாலுமெட்டிமலர்
சாதிமல் லிகையாகுமோ

கடலெலாநிறைவெள்ள மாயினுஞ்சுவைபெற்ற
காவிரியினாற்றாகுமோ
காகங்கள்கோடிதொனி செய்தாலுமொருசிறு
கருங்குயிற் றொனியாகுமோ
படர்கின்றபேய்ச்சுரை சொரிந்தபழமுந்திரிப்
பழமதற் கிணையாகுமோ
பகர்கின்றசாதியுங் கனவயதுமேன்மையும்
பலகூட்டமுந் தேகமார்
வடிவதிகமன்றுகுண மேயதிகமென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## செல்வத்தால்வருமுயர்வு

செல்வமதுசேரிலோ வெங்குபேர்வேங்கடைத்
திரளாகில் வேங்கடனுமாஞ்
செயல்கொண்டவேங்கடா சலனுமாமையராந்
திரளைய ரவர்களாகும்
நல்வரிசைகொடுதான டத்திடுங்காரிய
நயந்தரு தாகுமப்பா
னல்லோர்களின்னோக்கொ டொப்பமேலொருவசன
நவிலுமுன் கப்பமிடுவார்
சொல்வன்மைவாவென்ற பேர்வாருமென்பார்
சுவாமியாந் தேவரீராந்
துதிபெற்றதேவரீ ரவர்களாங்காலுமுன்
றொழுதெழுந் தருளுமென்பார்
பல்விதம்பெறுபரம லோபியர்கண்மிண்டனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## வறுமையால் வருமிழிவு

துதிக்கின்றபயனையுங் குறைசொல்வடந்தைதாய்
சோகமுற வசைகூறுவார்
துன்பமொடுமனைமெலியும் மேனிவேற்றுருவமாந்
தொலையாத கவலைவளரும்
உதிக்கின்றபுத்தியு மழுங்கிடுங்கல்விபோ
முதாரத்தி லதிகபசியா
முறவின்முறை யாருமொரு வார்த்தை சொல்லார்
வுத்தரமு மொருவர்கேளார் [சொன்ன
விதிக்கின்றவுகைத்தி லெல்லாருமிகழுவார்
மிடிவந்து சேர்ந்ததென்றுன்
மேன்மையேதறிவேது குலமேதுநலமேது
வித்தையே தெவரறிவர்காண்
மதிக்கின்றவுன்பதம் போற்றிலவைசேருமோ
மணவாள நாராயணன்
மணநிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. க௫

## உடனே கண்டிக்கப்படுபவர்கள்.

முடிகொண்டகொலையாளர் களவிஞேர்சாதிநெறி
முறைமைவழு கின்றதியோர்
மூர்க்கமுறுபகையாளர் வெகுசனவிரோதியர்கண்
மொழிமாறு கோளுரைப்போர்
மிடிகொண்டபேரைக் கொடுத்துளோர்கற்புடைய
மெல்லியரை மேவுமயலோர்
விசுவாசகாதமிரு செய்குவோர்துஷ்டமா
மிருகக்கண் மிக்கபிணிகள்
கடிகொண்டவிஷமுடன் செய்யானைவென்னவே
கருதுபன் மூன்றுவகையுங்
கண்டவுடனேபின்னை யெண்ணுதுகண்டித்தல்
கருணைமனு நீதிகண்டாய்

வடிகொண்டதெள்ளமுதமனையகுணசீலனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. க

பொறுத்துக் கண்டிக்கப்படுபவர்கள்.

கண்டுதிருப்பத்தினைத் தள்ளுவோர்குருசாமி
காரியக் குறைசெய்குவோர்
காலத்திடத்திற் பழித்துளோர்வஞ்சகங்
கருதுவோர் பொய்யுரைப்போர்
சண்டைகொடுதந்தைதாய் சுற்றமுடனாளுநிலைத்
தவிராத கலகமிடுவோர்
தம்முடையவலுமையா லெளியோர்வழக்கினைத்
தள்ளிய மதங்களுடையோர்
அண்டிவருதுஷ்டரொடு கூடிவினைசெய்குவோ
ராகுமிவ ரெண்மர்தமையு
மாறுபோன்மூன்றுமுறை கண்டபின்கண்டிப்ப
தரசர்மனுநீதிகண்டாய்
வண்டுலவுகின்றமலர் தண்டுளபமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே.

என்றுங் கண்டிக்கப்படாதவர்கள்.

ஆதாவிவந்தபேர் மிக்கதாளுபதியர்
ஓதிபெற்ற தந்தைதாயார்
சொல்லுமாசாரியார் புரோகிதர்புராணிகர்
சுகந்தந்த போகமடவார்
வேதாகமங்கற்ற வைதிகர் தபோதனர்கள்
விகடப்ர சங்கமிடுவோர்
வித்தையாலுயர்கின்ற கவிராஜர்சுந்தரனா
வீரர்மா பிணிலுயர்ந்தோர்

தீதானவெம்பிணி யடைந்துளோர்வறுமையோர்
சிறுவரொடு தனைநம்பினோர்
செய்யுமிவர்பதினெண்மர் மதியாதகுற்றங்கள்
செயினும் பொறுப்பதல்லால்
வாதாடியெதிர்செய்கை மன்னர்நெறியன்றுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. க௮

இவர் இதனால் வெல்வரெனல்.

வேந்தருடனேவேந்தர் வாதுவரிலேகொடிகொள்
வெற்றிகொண்டே செயிப்பார்
வீரருடனேவீரர் வாதுவரிலாயுத
விதத்தினலேசெயிப்பார்
போந்திடுமியோகியர்கள் வார்த்தையுசிதத்தாற்
பொருந்தவே வாதுவெல்வார்
புல்லர்க்குவாதுவரின் மரபெலாம்வசைசொலிப்
பொதுவிலக் காற்செயிப்பார்
சாந்தமணிவேசியர்கள் வாதுவந்தாற்பாத
சங்கீதமொடு செயிப்பார்
சரசகவிராசர்பிர சங்கத்தினால்வாது
தன்னைச்செயிப்பர் கண்டாய்
மாந்தளிரைநிகர்மேனி ராதையதிமோகனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. க௯

இக்குற்றத்தாலேதுபயன்படாதெனல்.

செயல்கொண்டமானமது பங்கைமாறிற்றிரு
செழித்தென்ன மாறிலென்ன
செய்யகுணவின்பரச மில்லாதமங்கையைச்
சேர்ந்தென்ன நீங்கிலென்ன

இயல்கொண்டகீர்த்திமரி யாதையில்லார்களை
யிகழ்ந்தென்ன புகழ்ந்துமென்ன
விடருற்றபோதுதவி செய்யாதபேர்நட்
பிருந்தென்ன போயுமென்ன
கயல்கொண்டவிழியினாள் பேரிளம்பெண்கொங்கை
காட்டிலென் மூடிலென்ன
கருணைகொண்டொருவருக் குரையாதபேர்வித்
தைகற்றென்ன மறக்கிலென்ன
வயல்கொண்டபயிர்மேனி புயல்கொண்டகளமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. உ௦

இவையெல்லாமளவுபடினுமாசையளவுபடாதெனல்

பொங்குநதிமணனுமா காயத்தினெல்லையும்
பொழியுமழை யின்றிவலையும்
புடவியிசைவருசனமு மடவியிசைவளர்மரமும்
பொருப்பின்மிசை யுற்றசிலைவும்
திங்களுடனுற்றதா ரகைகணமுமுன்பாத
சேவைசெய் வோர்பெருமையுந்
தெரிவையர்கண்பனமுமுனை நினையாதபலமூடர்
சென்மமுங் கடலாழமும்
அங்கசன்கணைபுரியு மோகமுங்கவிராச
ரருள்பெற்ற புத்திநலமு
மளவுகண்டாலுமோ மனிதருறுமாசைதனை
யளவிடக் கூடாதுகாண்
மங்கைமிதுலாபுரி மடந்தைமகிழ்நேயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. உக

## இன்னார்க்கு இதுவில்லையெனல்.

காதன்மிகுகாமுகர் தமக்குமுறையில்லைவஞ்
சகர்க்குபரி யாதையில்லை
கட்டுண்டகள்வருக் குறவின்முறையாரில்லை
கசடர்க்கு ஞானமில்லை
வேதமறியாசுரர் தமக்கருள்செயாரில்லை
விரோதிக்கு நேயரில்லை
மெய்ஞ்ஞானியர்க்குவரு சாதிகுலமொன்றில்லை
வீரர்க்கு மரணபயமில்லை
போதமிகுயோகிக்கு வினைசெய்குவாரில்லை
பொய்யர்முன் சாட்சியில்லை
புலவர்க்குநேயமில் லாரில்லைசெல்வரைப்
போற்றிலா வொருவரில்லை
மாதவெழில்கண்டுமன மகிழாதபேரில்லை
மணவாள நாராயணன்
மனைநிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. உஉ

## இது இவ்வாறாயின் இதுவாமெனல்.

எழுதினதுசொல்வதே ராயரொப்பந்தனக்
கிசையுமவ ளோரம்பையா
மிடிவேளையுதவுமவ னேகன்னன்வழிநடைக்
கேற்றதே யுற்றவசுவம்
பழகிமனமறியுமவ னேயூகிமந்த்ரிநற்
பயநீக்கி னோன்றந்தையாம்
பசியிற்கிடைத்ததே யமுதமாந்துயிலினேர்ப்
பட்டதே புஷ்பசயனம்
நிழறந்துகாத்ததே கற்பகத்தாகத்தி
னீர்தந்த தேகங்கையாம்
நிறைபிணிதவிர்த்ததே சஞ்சீவிதன்மட்டு
நீச்சுநீ ரேகடலதாம்

மறைமுழுதிலெழுத்தனைய மெய்யனைத்துய்யனை
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே.

## இவர்க்கிது தெய்வமெனல்.

தீதுபுரிலோபியர் தமக்குப்பணங்களே
தெய்வமாங் காமுகர்க்குத்
தெரிவையர்கடெய்வமாந் துஷ்டருக்கென்னிலே.
தீமையே தெய்வமாகும்
நீதியுடையோர்க்குப் பயந்தீர்த்திரக்ஷித்த
நேயரே தெய்வமாகு
நீங்காததரித்திரர் தமக்குக்கொடுத்தபேர்
நித்தமுந் துதிதெய்வமாம்
சாதியனைவர்க்குமறையோர்தெய்வமம்புவி
தனக்கரசனே தெய்வமாந்
சகலர்க்குமாசாரியன்றெய்வநாரியர்
தமக்குநாதன்றெய்வமாம்
மாதவம்புரிஞானியர்க்குநீதெய்வமா
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. ௨௬

## இதுண்டாயினு மிதுவில்லாவிடிற்பயனில்லையெனல்.

எத்தனைபொருட்சுவை யிருக்கினும்பக்திரச
மில்லாத கவிகளென்ன
வெண்கோடிசம்பளந் தருகினுஞ்சன்மான
மில்லாத சேவகமென்ன
சித்ராதிலீலைபல செய்யினுமிதழூறுடு
சேராத சுகமதென்ன
செப்பொன்மிருசெல்வமுண் டாயினும்பயிர்கொ
செயலிலா வளமையென்ன [ண்ட

வித்தையுளவெல்லாம் படிக்கினுங்குணவினய
மேவாத பெருமையென்ன
மெய்த்துளசியில்லாத நந்தவனமெனவே
விளங்குமென் பார்கள்கண்டாய்
மத்தகசராசன்மகிழ் விசயநரசிங்கமே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௨௫

இது இச்சிறப்படையினும் பயனில்லையெனல்.

காட்டிலெண்டஞ்செடி தழைத்தென்னகால்சிரங்
கனியது சிவக்கிலென்ன
கரைநாணலெல்லா மலர்ந்தென்னகாகங்
கழுத்திடை வெளுக்கிலென்ன
ஆட்டின்கழுத்திலதர் நீண்டென்னநீர்ப்பாசி
யதுபச்சை யாகிலென்ன
வற்பருக்கதிகாரம் வந்தென்னபேடிகையி
லாயுத மிருந்துமென்ன
நீட்டமொடுகொடிக்கு மயிர்வளர்ந்தாலென்ன
நீதியறி யாதமூடர்
நிறைசெல்வராயென்ன ஞானமில்லாக்கல்வி
நெறிபோ லிருக்குமென்பார்
வாட்டடங்கண்ணிபுனை கண்ணிமகிழ்கண்ணனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௨௬

கலியுக தோஷம்.

அப்புவியின்மிக்கமெய்ஞ் ஞானியைக்கண்டாலு
மதுவுமொரு வேஷமென்பா
ராகமபுராணமது நூல்விரும்பார்கள்பரி
யாசகதையே மெச்சுவார்

கம்பமிசையொருகோடி கரணமிட்டாலுமது
கண்கண்டவித்தையென்பார்
கற்பனையலங்கார மாக்கவிகள்பாடினுங்
கற்றவர்க் கெளியவென்பார்
நம்பிவிசுவாசமொடு துதிசெய்யினுங்கள்ள
ஞானமென் பார்களவைபோ
னயந்தகலியுகமகிமை நின்னையுஞ்சிலபேர்
நவின்றுகுறை சொல்வர்கண்டாய்
வம்பவிழ்மலர்ச்சோலை மலையலங்காரனே
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. உஎ

அரசரது நனறியறியாமை.

அரசரைக்கண்டபின் காரியக்காரருக்
கதிகபரி தானமுதவி
யதிகாரமொன்றினைப் பார்ப்பவரிடத்தினு
மதுக்கொட் டிரட்டியீந்தும்
கருதரினுவைப்பணந்தலைணைப் பணங்கண்முன்
கடன்வாங்கி யேகொடுத்துங்
கணக்கர்செலவெழுதார்க ளிட்டார்கடறுவர்
கடன்காரர் தாமறிப்பார்
விருதுசிட்டுக்காரர் வைவார்கள்கொல்லரோ
வெயிலிடை நிறுத்திவைப்பார்
விதமாகுமவரவர்க ளொல்லாஞ்சபாசென்ன
மெய்யாய் நடந்துகொளினும்
வரிசைபெறுதுரைகளவ ருமைசற்றறிவரோ
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. உஅ

## கவிவாணரருமை யறிவில்லாமை.

கற்பனையலங்கார மாக்கோவைபாடினுங்
கனவரிசை யொருபச்சடங
கலம்பகங்கூறினொரு துப்பட்டிபின்னைக்
கவிக்கென்னி லொருசோமனும்
நற்பொருளிலாவென்னி னூறுமாலைமடலுக்கு
நாணயம தாயொருபணம்
நல்வண்ணமென்னிலொரு சாப்பாடியோலைபின்னி
னன்மைதரு தாம்பூலமாம்
அற்புதம்பெறுகவிக ளென்னிற்பளாபளா
வதிவெகு மானமாகு
மப்படியுமாயிரத் தொருவரென்றிலங்க
ளருமையெவ ரறிவர்கண்டாய்
மற்பொருதபல்லரொடு முற்பொருதவீரனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௨.

## இதனையிவரன்றி யிவரறியாரெனல்.

சீர்த்தனைகளின்மகிமை பாகவதரல்லாற்
சிரிக்குறவர் தாமறிவரோ
கீர்த்திப்ரதாபமது விதரணிகரல்லாது
கெட்டலோபியரறிவரோ
சேர்த்தமருவிக்யான நீதிமன்னவரலாற்
சிலைவேடர் தாமறிவரோ
செய்யபகவற்கீதை மெய்ஞ்ஞானியல்லாது
சென்மநீசர்களறிவரோ
கோத்தமணிமாலையை மங்கையர்களல்லாற்
குரங்குகண் டாலறியுமோ
கொக்கோகமகிமைதனை நாகரிகரல்லாது
கூறுமேபடிக ளறிவரோ

வார்த்தையுசிதத்தைமந் த்ரிகளன்றியறிவரோ
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯0

## பயனில் சொல்லினிழிவு.

அசுகமென்றுதன்னைப் புகழ்ந்தபேயுந்தந்தை
யன்னையர் வருந்தமுறவே
யயலார்தமர்குறவு பேயுமடவார்புத்தி
யனுதினங் கேட்டபேயும்
சுகமென்றுபொதுமாத ரைக்கூடிமனைவியைத்
துயரமே செய்தபேயுந்
துணைந்துரணைகளமற்று முறிகின்றபேயுமுன்
சொன்னதில்லை யென்றபேயும்
செகமன்னராமென்ற தலையென்றபேயுமியல்
செய்நன்றி கொன்றபேயுந்
திரளானசபையினிற் பயனிலாவார்த்தையுரை
செய்கின்ற பேய்க்குநிகரோ
மகமென்றுகோசிக னழைக்கமகிழ்தூயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯௧

## எல்லைக்கடந்தலின் வருமிழிவு.

அரசர்மேலாணை தனை யெண்ணுதகுடிகளு
மாதாய மிஞ்சசெலவு
மன்புடையபேர்புத்தி கேளாதகோபமு
மனைவக்கடங் காதநாவும்
சரசவகைமிஞ்சவே வந்தபரிகாசமுந்
தனைமிஞ்ச தொழிலாளருந்
தயிரியந்தனைமிஞ்ச கவலையுஞ்சாகஸியோர்
தமைமிஞ்ச முறைவழக்கும்

காசரணவவயவங் தனைமிஞ்சுதேசமுங்
கவியின்மிஞ் சியவெழுத்துங்
கருதுமுறைகேளாத மனையாட்டிபுணர்சாய
கன்புகழை யொக்குமென்பர்
வாசராசகவிராஜர் புகழ்மேவதருகுலதிலக
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாரயனே. ௩௨

இவர்க்கு அமுதம் இவ்விடத்தெனல்.

அண்டருக்கமுதமது சொர்க்கத்தில்வேதியர்க்
கமுதமது சொல்லுரையிலே
யானகவிராஜருக் கமுதமணிநாவிலே
யாவினுக் கமுதமுலையில்
பண்டிதர்க்கமுதமது கையிலேவிதரணிகர்
பங்கிலமு தங்கண்ணிலே
பாகவதருக்கமுது காதிலேபரிவுடைய
பாங்கருக் கமுதமனதில்
ஒண்டொடியருக்கமுத மாமதியமென்வே
யுகந்திடுந் தேகமெல்லா
முற்றபெரியோர்தமக் கமுதங்குணத்திலே
யுணர்வுடைய பேர்க்கமுதமோ
மண்டலமளந்தவன் பாதத்திலென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாரயனே. ௩௩

இவர்க்குவிஷம் இவ்விடத்தெனல்.

திருடர்க்குவிடமெலாங் கையிலேகாமமிகு
தெரிவைக்கு விடமுலையிலே
தீயபொய்யர்க்குவிட நாவிலேமதமுடன்
றிரிவோர்க்கு விடமதியிலே

கருதரியகோளர்க்கு விடமுதடுவாயிலே
காமுகர் விடங்கண்ணிலே
கட்செவிவிடங்கள்பல் லடியிலேதேட்கெனிற்
கனவிடங் கடைவாயிலே
அரியதுஷ்டர்க்கென்னி லெட்டிமரமென்னவே
யங்கமெல் லாம்விடமதா
மடுத்துக்கெடுத்திடும் பகைவர்வுடமனதிலே
யம்பொன்விலை மாதருக்கு
மருவுவிடமல்குலிற் றெரியவசமன்றுகாண்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௩௪

இவர்க்குப்புண்ணிய மிதுவெனல்.

உன்னுடையபதசேவை கண்டுபணிகின்றதே
யுடல்செய்த புண்ணியமதா
முறைகொண்டகீழுரைமின் சாரங்கள்கேட்பதே
யுற்றசெவியின் புண்ணியம்
தன்னுடையபுத்திர ரளோந்தசோறுண்பதே
சாற்றுநாவின் புண்ணியந்
தத்துவமுணர்ந்தபெரி யோர்தமைக்காண்பதே
சார்ந்தவிழியின்புண்ணியம்
பன்னுமிரவலர்கேட்கு முன்னங்கொடுப்பதே
பாணியது செய்புண்ணியம்
பதிவிரதமங்கைகுண மிக்கபுருடற்குப்
பலிப்பவே வெகுபுண்ணியம்
மன்னுமிவைமுன்செய்த புண்ணியமதென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௩௫

## இவர்க்குப் பாவமிதுவெனல்.

திருந்துகற்பனையிலாப் புன்கவிகள் கேட்டதே
செவிசெய்த பாவமாகுஞ்
செயலருமையறியாத பேர்கண்முன் சேவகத்
திரிதல்கால் செய்தபாவம்
பரித்தவுபசாரமா தாவிலார்மனையுணவு
பருகலு வின்பாவமாம்
பாவனையுஞ்சருதி நயமிலாப்பாதமது
பார்த்தல்விழி செய்தபாவம்
தருந்தமிழையறியாத பேர்களிடமேற்கின்ற
தகைமைகை செய்தபாவந்
தன்பெயர்விளங்காத பிள்ளையைப்பெறுவதே
தாய்வயிறு செய்தபாவம்
வருந்துயரமுன்செய்த பாவவினையென்பர்காண்
மணவாள நாராயணன்
மணிதிருவுறையலர்மேலுறு மங்கைமணவாளனே
வரதவேங்கடாயனே. ௫௰

## இவர்க்கிவையுளவேறுசிலவேண்டுமெனல்.

ஆதிவீரனென்னினுந் தந்திரவுபாயமுடை
னடைபகைர வெல்லல்வேண்டு
மாயிரம்வித்தைகற் றாலுமனந்தனி
லடக்கம திருத்தல்வேண்டும்
நதிகோடிதீர்த்தங் காறுமோடத்தனை
நயத்தாதரை சேரல்வேண்டும்
ஞானதத்துவமுணர்ந் தாலுமோனத்தினி
னடக்கைதனை யறிதல்வேண்டும்
துற்போர்குபேரனென் றாலுமொருலாபமுறு
தொழிலுடனிருத்தல்வேண்டுந்
துய்யவல்லமையுடையனெனினுமொருசார்பினுந்
றுணைகளைக் காணல்வேண்டும்

மதியூகியென்னினும்பெரியற்சொற்கொளல்வேண்டு
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௩௯

இவர்க்கிவை வேண்டாமெனல்.

பெற்றதாய்தந்தைகள் சுற்றமேமுதலான
பெரியோரை முனிதல்வேண்டாம்
பின்னொன்றுமுன்னொன்று பேசியேயவமானம்
பேர்கொண்டு திரிதல்வேண்டாம்
உற்றவர்கள்போலவுட் பகையானவஞ்சகரை
யொருநாளு நம்பவேண்டா
மொருவருக்கிச்சையாய்ப் பொய்சொல்லிப்பின்
சபையிலூமைபோ னிற்றல்வேண்டாம்
சற்றுமேபொறுமையில் லாதவர்கள்சண்டையிற்
றான்போய் விலக்கல்வேண்டாந்
தைரியந்தனில்விக்ர மாதித்தனென்னிலுந்
தன்னையே புகழவேண்டாம்
மற்றொன்றுமெண்ணாது செய்யவேண்டாமென்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

இவர்க்கிவை பாவமெனல்.

அரசர்வெகுமானஞ்செய் போதுதடைவருவிலொ
வன்றுவிதி பாவமாகு
மானபெரியோர்பழமை யாய்வந்தநேயமதை
யகல்வதே தத்தயோகம்
தருகின்றகாரியங் கைகூடியேபின்பு
தவறில்லை திருதியாகுந்
சற்குணமடைந்துளோ ருத்தமரைமுனிவதே
சந்திராஷ் டமதாகுமாம்

கருதியவிருந்தினுட னுண்ணாததனியுணவு
காணுமது வேதாரத்தினங்
கலகமேசெய்கின்ற வினைரைக்காண்பதே
கனவாக்ய வேளைகண்டாய்
பரிசுசுதமெனவந்த காசிபகுலோத்துங்க
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯௯

இவர் இத்தீக்கோளாவரெனல்.

நாமக்களைக்கண்டு தங்கள்காரியமெலாஞ்
சொல்லிச்செய் கின்றவேளை
சொல்லெலாம் பொய்யெனவு மிவர்சாட்சிமெய்
யெனவுந் தோன்றுவோ னவலமாகும்
திறமுற்றகல்வியொடு குணமிக்ககவிராஜா
திராான ராஜசபையில்
செய்யும்ப்ரசங்கத்திலொருபழுதுசொல்லுவோன்
சென்மத்தி லங்காரகன்
அருள்பெற்றவிதாணிக ரைக்காத்தனேகறு
ளனுசரித் தியல்பாகியே
யவர்கொடுக்கும்போதி லிடர்சொலிவிலக்குவோ
னஷ்டமச் சனியறுரும்
மருவுற்றலர்ந்தவம் புயமணியுமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௱

இது இவ்வாறுயின் இச்சிறப்பிற்றுமெனல்.

தரணிமன்னவர்சபையின் மெய்க்கின்றவரிசையே
தனதுபட் டாபிஷேகஞ்
சபாசென்றுமெச்சிக் கொடுக்குமதிகாரமே
சாம்பிராச்ய போகமாகும்

பரிவுடனினைத்தபடி காரியங்கூடிலது
பதினொன்றி னிற்குருவதாம்
பந்துஜனவர்க்கங்க ளுடனுணவுசெய்கின்ற
பாக்யமே கலியாணமாம்
அரிவைகுணரஞ்சிதம் தாய்வந்துசேருநா
ளன்றமிர்த சித்தயோக
மன்பானபெரியோர்க டரிசனஞ்செய்வதே
யானசுப தினமென்பர்காண்
மரகதம்பூவைமுகி னீலமணிவண்ணனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௪௧

மனிதர்களிலே துஷ்டரும் ராக்ஷசரும் பூதரும்

புண்ணியம்பாவமறி யார்மாதவஞ்செயார்
புகல்கல்வி நெறியுமறியார்
புனிதரைப்போற்றார்கள் பரதிரவியங்கொள்வார்
புன்மைசேர் துஷ்டராவார்
எண்ணியொருகாரியஞ் செய்பவர்கள்வலுமையா
லெவருக்கு மிடர்புரிகுவா
ரிரக்கமில்லார்பொய் யுரைப்பவர்வஞ்சிப்பவர்க
ளிவர்கள்ராட் சசர்களாவார்
நண்ணியெளியோர்தமை வெருட்டுவார்வலியவரை
நாடிவஞ் சனையில்வெல்வார்
நாரியர்களெவரையுங் கூடுவார்மிகவுண்பா
நாணமறி யார்பூதர்காண்
மண்ணிலொருமூவடி யிரந்தநெடுமாயனே
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௪௨

மூர்க்கர் முதலியோரியல்பு.

மெய்யானபுத்திபல சொல்லினுந்தன்புத்தி
மேலாகி னென்மூர்க்கனும்
மிக்கபெரியோர்களைத் தாழ்வுசெய்தர்பர்தமை
மேன்மைசெய் வோன்மூடனும்
செய்யாதகாரியந் தெனினும்பிடித்தபிடி
செய்யுமவனே துஷ்டனுந்
திரளானநன்றிபல் செய்தவர்க்கேயிடறு
செய்பவன் மகாபாதகன்
ஐயாவெனப்பணிந் தாலுமேகோபம
தடங்காத வன்குரூர
னானினந்தீமைபுரி வோனெந்தநாளினு
மடங்காத சண்டாளனும்
மையார்தடஞ்சோலை திகழ்கின்றகளமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. சக.

இப்படிப்பட்டவன் இவ்வங்கவீன னெனல்.

காதவழியானநதி மாதலந்தறியாத
கயவனே யினமுடவன்
கைதந்தவேலைவா சிக்கமாட்டாதவொரு
கசடனே மிக்ககுருடன்
நீதுபெறுதன்களவு கண்டவர்க்குத்தரஞ்
செப்பிலா தவனூமையாஞ்
செயலானதன்மகனை யொன்றெனினுமறியாத
செய்கையுடை யோன்செவிடனும்
ஏதெனினுமொருபேர் விளங்காதமேகம
தெடுக்குமவ னேகுருபி
யென்றெனினுமுன்பாத தரிசனஞ்செய்யாத
வீணனே நீசனென்பார்
மாதுசத்தியபாமை தழுவுமணிமார்பனே
மணவாள நாராயணன்

மணதிறுறையலர்மேலு மங்கைமணவாளனை
வரதவேங் கடராயனே. ௬௭

உலோபியர் வசை.

நசைபெற்றவேதவே தியர்தமக்குதவா
நவின்றலோ பர்க்குநேயன்
நாற்கவிபொழிந்தகவி ராசர்க்குமொன்றேனு
நல்கிடான் கொஞ்சலோபி
இசைபெற்றகீதமுறை செய்பாடகர்க்குமொன்
றீகிலான் பாதிலோபி
யியலானமட்டோரா சர்க்குமொன்றுதவிலா
னேற்றமுக் காலுலோபி
திசைபெற்றவிகடகவி ராசர்க்குமுதவிலான்
றீயமுழு லோபிநடனஞ்
செய்மாதரபினயங் கண்டுமொன்றுதவிலான
சேர்பரம லோபிகண்டாய்
வசைபெற்றலோபியர் தங்கள்கண்டீரவன்
மணவாள நாராயணன்
மணதிறுறையலர்மேலு மங்கைமணவாளனை
வரதவேங் கடராயனே. ௬௮

உலோபியர் வஞ்சப்புகழ்ச்சி.

கண்டபகையாளிமுன் னின்றுபொருதாமற்
களத்திற் புறங்கொடுப்பார்
கன்னமிடுகள்வருக் காடைகளும்பணிகளுநி
காளுமலேகொடுப்பார்
சண்டமாருதமென்ன வருகின்றபகைவர்க
டமக்குமனை யுங்கொடுப்பார்
சவுக்கிட்டடிக்கின்ற மன்னர்க்குவீட்டுத்
தனங்களெல்லாங் கொடுப்பார்
அண்டிவருமெமதூதர் வந்துதான்கேட்குமுன்
னங்கமுறு முயிர்கொடுப்பா
ரவனிமிசையிப்படி கொடுக்கின்றபேர்கடமை
யதிலோப ரென்பதென்னே

மண்டலமும்விண்டலமு முண்டகனிவாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௪௩

உலோபியர் குணமாறுமை.

தேன்கொண்டதுளியொன்றி னுலேழுகடலெலாந்
திதிக்கவேசெய்யினுஞ்
செய்யபூமலரினால் வச்சிரந்தன்னைச்
சிறக்கவே பொடிசெய்யினும்
கான்கொண்டமலையெலாங் கைகொண்டவெண்ணை
யாற், கனலுற்ற மெழுகுசெயினுங்
கயவர்க்குநீதியும் பேடிக்குவீரமுங்
கபடர்க்கு மெய்ஞ்ஞானமும்
ஊன்கொண்டமூடர்க் கிரக்கமுந்தெளிவுற
வுரைத்துநலமேசெய்யினு
மூமைசெவிடன்குருடன் முத்தமிழ்படிக்கினு
முலோபருக் கீவருமோ
வான்கொண்டதேவர்மொழிமலர்கொண்டபாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௪௪

மக்களிற்பதராவ ரிவரெனல்.

கொண்டகடன்வட்டியுட னன்றுபோற்குணமாய்
கொடுத்துமகி ழாதபதருங்
கூறுபிணைசாட்சிமுறி யுடன்மறித்தாலுங்
கொடாதொளிக் கின்றபதரும்
கண்டவுடனொருகோடி சொல்லிப்பினொன்றேனுங்
கருதிச்செ யாதபதருங்
காணிடத்தினிற் பழிகூறியவரையெதிர்
கண்டுபுகழ் கின்றபதரும்

பண்டொருவர் செய்நன்றி தனையேமறந்துபின்
பழிசொல்லு கின்றபதரும்
பரமாதராசையால் வசைகொண்டபதரும்
பறந்துமிக வுஞ்சிதறவே
மண்டிவருசண்டப்ர சண்டமாருதமான
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௬௪

இக்குற்றமுடையோர்க்கும்
இது செயல்வேண்டு மெனல்.

கதித்திடும்பகைவரென் றாலுமாபத்தினிற்
கண்டுதவி செய்யல்வேண்டும்
கல்வியறியாதசபை யெனினும்ப்ரசங்கங்கள்
கவிராசர் செய்யல்வேண்டும்
விதித்தமுழுமூடரென் றாலுநல்லோர்கண்டு
வித்தைகற் பித்தல்வேண்டும்
வெய்யசினமூர்க்கரென் றாலுநல்லோர்கண்டு
மேற்புத்தி சொல்லல்வேண்டும்
அதிர்ஷ்டமிலையென்னினுஞ் சமயாமன்மிக்கதொழி
லதிலே முயற்சிவேண்டு
மசாத்தியமதான கனரோகமென்றாலுமோ
ரவிஷதம திவர்கண்டாய்
வசிஷ்டரொடுவான்மீக முனிதுதிசரித்ரனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

இதினும் இது மிக்கதெனல்.

சினமுந்திரிந்து தனி யாகியேமிக்கபொரு
ளோடியே வாழுமதினுஞ்
செல்வரொடுதந்தைதாய் சுற்றமுங்கூடிச்
சிறந்துண்ட கூழதிகமாம்
தனதுமரியாதையொடு பெருமையறியாதபேர்
தனமாரி பொழியுமதினுஞ்

சமமானமேன்மைபெரி தின்றபெரியோர் தந்த
தாம்பூல மேயதிகமாம்
கனமருவுபலபல மகாவித்தைசிலசில
கருத்தொடு படிக்குமதினுங்
கருணைபெறவொருவித்தை யாயினுங்குறைவறக்
கற்கின்ற தேயதிகமாம்
மனிதர்சிலரிவையன்றி யவையதிகமென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேனு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௬0

இதினுமிது வென்றியெனல்.

மிக்கதுடிகண்டுளம் வெருண்டுகலைமானையே
வென்றுசய மாகுமதினும்
வெஞ்சினமிகுந்துகவ ரும்புலியுடன்பொருது
மெய்கொண்ட வடுவேசயம்
பக்குவமுதிர்ந்தபே ரிளமாதுகொங்கையிற்
பரிவுடன் சேருமதினும்
பைம்பொன்மணிமாலைபுனை வாலரதியூடலிற்
பாததா டனம்மேசயம்
தக்கதொருகல்வி யறியாதமூடர்
சந்தோஷ மாகுமதினுந்
தமிழருமையறிகின்ற பெரியோர்பழித்ததின்
தனையதே சயமென்பர்காண்
மைக்குவளைசெங்குவளை வாசமலர்களமுரின்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேனு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௬௧

இதுவிதனை வசப்படுத்துமெனல்.

சிந்தைதெளிகல்வியே லோகதசியம்பத்தி
செய்வதே தெய்வவசியஞ்
செய்யுமரியாதையே வித்வசனவசியமாஞ்
செல்வமுற யோர்கள்வசியம்

எந்தவிதமோந்திரள நல்கும்பணங்களே
யின்பவிலே மாதர்வசிய
வெப்பொழுதுமவர்மன தறிந்துகட்டிக்காத்
திருப்பதே ராஜவசியம்
தந்ததண்டனைகளே துஷ்டசனவசியமாந்
தானமே கீர்த்திவசியஞ்
சாந்தகுணநயமாய் நடந்திடுமொழுக்கமே
சகலஜன வசியமாகும்
மந்திரமெழுத்திட்டு மேயுனதுவசியமா
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯௨

இச்செய்கையோர் இச்சிறப்புப்பெயர்
கொள்வரெனல்.

சரணென்றடைந்தவர் தமக்குவருவினையெலாந்
தாங்குவோன் புருஷமேரு
தன்னுடையசெய்கைபோலெவரையும்பார்க்கின்ற
தகைமையோன் றெய்வபுருஷன்
திரணமெனினும்பிறர் பொருட்காசையில்லாத
செய்கையோன் புருஷோத்தமன்
தீராதவினைவரினு மற்பரைப்பணியாத
தீரனே புருஷசிங்கம்
பொருவிலாத்தந்தைதா யென்னினுங்கண்டபடி
புகலுவோன் புருஷாதர்மம்
போற்றுமவர்மனதிற் குறிப்பறிந்துதவுவோன்
புருஷநா யகமென்பர்காண்
மரபெலாமிப்படி புகழ்ந்தகுணசேகரன்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯௩

இச்செய்கையோர் இவ்வழிபெயர் பெறுவரெனல்.

சற்றேனினுமொருகல்வி யறியாதசுயவனே
தாங்குமுயர் கொண்டபரமாந்
தன்புத்தியன்றிபிறர் புத்தியால்வினைசெயுந்
தகைமைய்யா னேபதுமையாம்
கொற்றவர்கள்பகையாற் றுரத்துண்டுதிரிகுவோன்
கூண்டையுற வானபக்ஷி
கோபமதுதந்தையேயன்றிமற்றோரையுங்
கோபிக்குமவன்மிருகமாம்
கற்றபெரியோரையெதிர் பணியாதமூடனே
கைகால் முளைத்தசிலையாம்
கண்டவர்களெல்லாம் பழிக்கின்றகோளனே
கனதுஷ்ட ஜெந்துவென்பார்
மற்றவர்களையமது கனவிலுங்காணாத
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௫௪

கல்விப்பொருட்சிறப்பு.

தெள்ளமுதமனையகல் விப்பொருள்படைத்திடிற்
தேசமெல் லாந்துதிக்குஞ்
செயத்தம்பமானபுகழ் நிலைநிற்குமிவையெலாஞ்
செம்பொன்மிகு செல்வமதுபோல்
வெள்ளமதுகொளுமெனும் பயமில்லைகனலினால்
வெம்பவரு சலனமில்லை
வேந்தர்கள்பறித்திடக் கூடாதுசோதரர்
விரும்பினும் பங்குறாது
கள்ளராற்றிருடவும் முடியாதுவரவரக்
கனமலாற் குறைவுறாது
கருணைஞானந்தழையு மாகையாலுனையிதய
சமலத்தில் வைப்பதெளிமாம்
வள்ளலெனவருகின்ற மாடபூசியாதிபன்
மணவாள நாராயணன்

மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௫௫

கவிதைச்சிறப்பு.

உரைகொண்டுசொல்வரிசை சேர்ந்துபொருளின்ப
வகை யோசைபெற் றேமதுரமா
யுற்றநவரசமுடன் கற்பனையலங்கார
முண்டான யேகவுடமாய்
நிறைகொண்டசீர்தனை விகற்பம்பொருந்திநன்
னீதியாய்க் கடைதுடிப்பாய்
நிறைகின்றசபைதனி லுதாரணமதாகிநிலை
நின்றுபழு தென்றிடாமல்
திரைகொண்டதண்கடலில் வருமமுதபாகமாய்த்
தேசப்ர சித்தியாகச்
செப்புமொருகவிகொண்டு குலமெலாம்வந்தடிமை
செயினுமது நிகராதுகாண்
வரைகொண்டுபொழியுமழை காத்தருளுமையனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே ௫௬

தந்தீவினைப்பயன்.

திங்களுதயங்கண்டு மலராதிருப்பது
செங்கமல முற்றவினையே
தினகரனையெதிர்கண்டு முகைகொண்டுவாடுவது
சேதாம்பல் செய்தவினையே
கொங்குலவுசண்பக சுகந்தமலர் கண்டுமருள்
கொண்டது சுரும்பின்வினையே
கொண்டன்மழைகண்டுள மெலிந்திடவருந்துவது
கோகிலஞ்செய்தவினையே
அங்கணுலகெங்கணு மகிழ்ந்தபெரியோர்களுக்
கருளா திருந்துவிடினு
மவர்மீதுகுற்றமது சொல்வரோசேர்ந்தவ
ரதிஷ்டமென் பார்கள்கண்டாய்

வங்கியந் தருமிசை கனிந்தகனிவாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௯௭

அரசர் கவிவாணர்க்குச் செய்யுமுபசாரம்.

போசனவசந்தமலர் மாலைதாம்பூலம்
பொருந்துவஸ் திரபூஷணம்
புரவியொடுகவிகையுஞ் சிவிகைவரிவாத்தியம்
பூமியனை தனதானியம்
தூசுலவுஞவசமெனும் வெகுமானசோடசந்
தூதரால் வரவழைத்தல்
தோன்றமுன்னெழுதல்வந்தருள்கெனத்தழுவுத
றுதித்திட விருக்கையுதவல்
தேசவெகுமாணங்கள் செய்தெழுதல்வழிவிடுத
லிறையங்கி காரமேழாம்
நெறிகொண்டபுவிராசர் கவிராசர்பாற்செய்யு
நீதிமுறை யென்பர்கண்டாய்
வாசவன்பெருவிசய சூதனெனுநாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. ௯௮

புல்லர் நல்லோர்குண மறியாரெனல்.

சந்தனவனந்தனி லிருந்துமதன் மணமதைச்
சற்றுமறி யார்கிராதர்
தரளங்குனிக்குமவ ரதன்மாலையணியார்கள்
சங்குமணி தன்னையணிவார்
கந்தமலிதாமரை யடுத்துமண்டுகங்
கருஞ்சேறு தன்னையருந்தும்
காமருவுதேமரவின் மிசையிருந்தாலுமோ
காகமது வேம்புநுகரும்
அந்தவகைபோலநல் லோர்தமையடுத்தோ
யனைகராட் பழகிவிடினு

மற்பிறர்தாமறிகின்ற தறிவதல்லாமன்மற்
றவர்மகிமை யறிவார்களோ
வந்திடுகணந்தன்னி லவர்பெருமையறிகின்ற
மணவாள நாராயணன்
மணத்திலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே 59

புல்லரைப் பாடும் புலவர்பயன்பெறுமை

நாவினிற்சொல்லுநய மும்கண்டுவஞ்சகரை
நட்பென்று வருநேயரும்
நவமதனையன்னமெழில் கண்டுபேடன்றனை
நாடிவரு மடமாதரும்
காவினிலுயர்ச்சியும் பசுமையுங்கண்டிலவு
காத்திருக்கின்ற கிளியுங்
கானலைக்கண்டுபுன லென்னவேயானைக்கொண்டு
கருகியே யேகுமானும்
பூவினிற்பொலிவுடனே மும்கண்டுகேதகை
பொருந்துதே னுகிமளியும்
புல்லர்தஞ்செல்வங்கள் கண்டுதுதிசெய்திடும்
புலவர்செய லொக்குமென்பார்
மாவினிற்குயில்வேலை வாவெனுங்களமேறின்
மணவாள நாராயணன்
மணத்திலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. 60

மேலோர்செயல் கீழோர்க்காகாமை.

எந்தவினைசெய்தாலு முனிவோர்கண்மாதவ
மிசைத்தாற் பெருமைபெறுவா
ரிகழ்ந்துவசைசொல்லினுங் கவிராஜாவித்தையா
லென்றுமிகுமேன்மைபெறுவார்
நிறைதமதமயோன்று வழுவினுந் துரைகள்செந்
திருவினாற் புகழ்சிறப்பார்
சீரியர்களெப்படி புரிந்தாலுமேற்குமது
சிறுமையோர் செய்யவசமோ

தோகையர்களும்பரி சனங்களுங்கூடியே
சொற்படி நடத்தல்வேண்டும்
மிருந்தால்தாரிக் கம்புகேன்முதலான
மேன்மையோ ரின்பாசயாம்
வேஷங்களக்குமுஞ் பாஷியுப்பாஷையும்
வெவ்வே றிருத்தல்வேணுங்
புகழ்ந்தபதமிங்கிதம் பரிகாசவிடங்கள்
புண்ணிய கதாப்ரசங்கம்
போற்றுபாவனைமிருகாதிகளுஞ்சுருதி
புகழ்ந்கி[illegible]மை
மகிழ்ந்திடுஞ்சபைதேவர் சபையென்றுசொல்வர்காண்
மணவாள நாராயணன்
மணதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே 65

விசித்ர வித்தைச் சிறப்பு

சத்திகணபதி துர்க்கை சரஸ்வதியோகாளி
சாமுண்டி யியன் மோழுகதிச்
சங்கமோரிஜயகண்டி டக்கைகைத்தாளங்கள்
சத்தமொடு மிகமுழங்கச
சித்ரமிகுமாத்திரைக் கோவின்முறையங்கமுறை
செப்பிமுறை பத்துமுறைகள்
செய்முறைய மைத்து ராஜசஜகரணங்கள்
சேர்ந்துகோ கரணமார்க்கம்
வித்தைபுரிஸ்தம்பன தாதியாபஷ்டாங்க
விதமா மயேந்த்ரசாலம்
மிகுமந்த்ரசாலமுத லானசெப்பிடுவித்தை
மேன்மையவர் தந்த்ரநீதி
மந்தகசாரசதே வேந்த்ராலுந்தெரியவே
மணவாளநாராயணன்
மணதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே 66

பௌராணிகர்

ஆருக்குமானந்தமாகவே பொருள்சொல்லு
மவனே புராணிகபுண
ணங்கமொடுகிரகநிலை கணிதமுந்தெரிகுவோ
னருள்புரோ கிதபூசுரன்
சீருற்றசமயமெலா மெச்சப்ரதங்கமுறை
செப்புமவனே வித்துவான்
செய்யுமந்திரயந்த்ர தந்த்ரமொடு
சிலனே மந்த்ரவாதி
ஏருற்றகல்விகுண மேன்மைபோதங்க
ளிசையுமவ னாசாரியு
னென்றுமவாசொற்படி நடத்தாயபக்தியோ
டிருக்குமவனே சீஷனுகும்
மாருக்குவேதாந்த வாசனேநேசனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே

மருத்துவ னியல்பு,

திரமானசாஸ்திர முணர்ந்தொருசிகிச்சையது
செய்திட வழைத்தபின்போய்த்
தேசகாலஞ்சாதி தேகங்குணம்பிணி
திறக்குமா றுந்தெளிந்து
கரமானநாடிமுத லெட்டுப்பரீட்சையுங்
கண்டுகளி கங்கியாழுங்
கனகுளிகைபஸ்பமொடு சிந்தூரஞ்சூரணம்
கருதுலேகியதயிலமாம்
பரமானநன்மருந்துங் கொடுத்துசிதமாய்ப்
பத்தியமுமெவளிதாகவே
பரிவுபெறுமாரோக்கி யஞ்செய்துதிரளாசை
பகராத பண்டிதனென்
வரமானதன்வந் திரிக்குநிகர்செல்வர்காண்
மணவாள நாராயணன்

தனதானியங்கறவைமுதலானசெல்வந்
தழைத்தென் தானமுதவி
மக்கண்மக்களொடு வாழ்வதேவாழ்வுகாண்
மணவாள நாராயணன்
மனதினிறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே 72

### மருத்துவர் செல்லத்தகாவிடங்கள்.

தீராதரோகமுடை யோரிடமுமுண்மையது
செப்பாத பொய்யரிடமுஞ்
சீரானவொருவர்பண் டிதமின்றிவெகுவிதஞ்
செய்துகொள் வோர்களிடமும்
ஏராதகோபமுறு மூர்க்கமன்னவரிடமு
மேந்திழையை மனதுபிரியா
விம்பமாமதிவிரக மனகாமுகரிடமு
மெய்ப்படி கலஞ்செய்யினும்
தாராலோபரிட மும்பத்தியத்தனைத்
தாழ்வுசெய வோர்களிடமுஞ்
சகலசனகண்டக னெனுந்துஷ்டரிடமுமிரு
தனமாரியேபொழியினும்
வாராதிருப்பதே பண்டிதர்கணீதிகாண்
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே 73

### நோய்க்கிடங்கொடார் செய்கை

சனிபுதன்றனிலெண்ணெய் வெந்நீரின்மூழ்குவார்
சாருமிள வெயில்விரும்பார்
தம்வயதின்மேலான மங்கையைச்சேரார்
சதாகாலம் வழிநடவார்
பனியிலுங்காற்றிலும் மெய்வருந்தார்மடைப்
பள்ளியிற் சேவசியார்

பழங்கறியருந்தா ரிரண்டடடக்காரொன்று
பலகால முய்விட்டிடார்
கனிபொடுகிழங்குகளை மிருந்துபுசியார்பசி
கலந்தன்றி யுணவுசெய்யார்
காய்சகடபா லுண்பர்நீ யோர்கூட்டுவார்தினங்
காவேரி தனின்மூழ்குவார்
மனிதரிவரிவர்சொன்ன பேர்க்குநோய்சேருமோ
மணவாள நாராயணன்
மனதினுறை லர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. 74

தந்தைமுதலியோராவார் இவரெனல்.

நிலமுடன்கிருகமுஞ் செல்வமுமக்கத்துகட
னிலுவையொன் றில்லாமலே
நிறைகல்வியுமைசெய்து நெறியொடுவளர்க்கின்ற
நேசனே யுயர்தந்தையாம்
தலைந்தியமெனவெ வளர்த்தபின்செல்வங்கள்
கண்டுமிக மனமகிழ்ந்து
கருதரியபுத்திரன் போலமருமகளையுங்
கருணைசெய் பவளன்னையாம்
பலகலையுணர்ந்துமிகு செல்வமுநதேடிப்
பகிர்ந்துதன் பேர்விளங்கப்
பண்பான தந்தைதாய்க் குகவியேயவர்சொன்ன
படிசெய்கு வோன்புத்ரனும்
மலர்பொழிசெழுஞ்சோலை மலைவளருமாயனே
மணவாள நாராயணன்
மனதினுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. 75

கற்புநல்ல ளியல்பு.

அரிதான மாதவஞ் செய்கின்றமுனிவோ
ரடைந்திடவ ரந்தனைப்பேர்

லடுத்ததர் தமைக்காத்து மிக்கமேலவர் தமை
யடக்குமுன் சக்கரம்போல்
பெரியோரிருக்கின்ற சபையினிற் கவிராஜர்
பேசுமப்ர சங்கமதுபோல்
பேருலகமெய்க்கவரு மனுநீதிமுடிவேந்தர்
பெறுகின்ற மாகீர்த்திபோல்
ஒருகோடி நட்சத்திரங்களுடனேவே
யுதிக்குஞ் சீதரவிபோ
லுபயகுலசுத்தனும் பகீரதன்போலவே
யொருபிள்ளை போதுமலதல்
மாவெலாமென்னைமே லடையுமென்பார்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. 76

சகோதர ரொருமை.

தனதுபட்டத்தினைத் தம்பியர்க்கீயெனத்
தந்துகவி முந்தையனுக்
தமையனுர்வருமளவு பரிவிரதமாகவே
தபசுபுரி யுத்தம்பியும்
அனுதனப்பாலித்த தாய்தனைப்போலவே
கருணைசெய் திடுமதனியும்
காணுமுன்றந்தைபோற் றிருவடிகள்பணியுங்
கனிட்டனிட மனையாட்டியும்
தினந்தினம்பரிவாகி யம்மையேயென்றுபேர்
செப்புங் கொழுந்தனுருந்
சேர்ந்துவாழ்கின்றபோ திரேதாயுகந்தனிற்
றசரத குமாரர்கண்டாய்
வாசமலர்கமழ்கின்ற வாவிசூழ்களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. 77

வாசமலர்மங்கைமுடி கொண்டுவளர்களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கையணவாளனே
வரதவேங் கடராயனே. 79

கற்புடைய பெண்டீரியல்பு

ஓதுஜபபூசைகட் கினியகுற்றேவல்க
ளுகந்துசெய் போதுகுருவா
முறைகொண்டசரசஞ்செய் போதுமன்மதனு
மொழிந்தவ ளோதெய்வமாம்
நாதனைக்கருதியவ னுண்டகுறையமுதாக
நவில்வேச யும்தேசமாம்
நதியாடபலனோன்பு தேவதாதரிசன
நயந்தபல விரதமுடன்
பாததரிசனமாக்கொள் சுத்தியாய்ப்புத்தியாய்ப்
பத்தியாய்க் கடவிளுமும்
பாரென் றுகலைவிதுறை செய்கினுஞ் செய்கின்ற
பதிவிரத மாக்கயானை
மாதர்புகழ்கீர்த்தியே துதிபெற்றதல்லவோ
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கையணவாளனே
வரதவேங் கடராயனே. 80

நற்பெண்டீரியல்பு.

பஞ்சணையுகைருகாக நின்றுவாவென்றபின்
பரிவினுட னருகில்வந்து
பாக்கிலைமடித்தருகு ளிக்குமெத்தையில்வந்து
பரிமள மிகத்திமிர்ந்து
கொஞ்சிமலர்சூடியிசை பாடிவிளையாடியே
கொக்கோக விதயறிந்து
கூடியிதயிருவோரு முறையிபருகினியபுட்
குயிலோசை மிகமுழங்க

நெஞ்சுமகிழ்வொடுசோத காணகிகாவுபரி
கேயாகி கேளிதன்னால்
நிறையயிர்க்கபோகசம் போகமைபோகமுட
னீங்காத யோகமுகவும்
வஞ்சியினலாதுமனம வேறொன்றின்மகிழுமோ
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௧

## தீப்பெண்டீ ரியல்பு.

ஐயருக்கமுதுபடை யென்றவந்தாய்நீயு
மாண்பிள்ளையென றெண்ணவோ
வரிசியெங்கேபானை சட்டியெங்கேயெனப
ளவள்சொன்ன வகைகளெல்லாம்
பையவேகொண்டுவந் தாலுசமைக்கப்
படாதுகலே நோருதென்று
பாயிற்கிடப்பள்சின மாயென்றுபேசினால்
பாருனக் கேற்றபுத்தி
செய்யவல்லேனென்பள் சற்றடித்தாலஞ்சு
தின்கிறேன கூகூவெனத்
தெருவீடுதோறுமுறை யிருபெண்டிருண்டெனிற்
றீயநமன் வேறுமுண்டோ
வையகம்புகழ்சோலை மலையலங்காரனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௨

## பரத்தையரியல்பு.

கொச்சியுறுமஞ்சள்வங் காளமுறுபச்சையிலை
கூறுசண் பகமெட்டுடன்
கூடியசலங்குவஞ் சனமாடிபொற்கண்டை
கொண்டவெண் டுகிலுடுத்தி
கச்சிளநீர்கொங்கைமேற் கங்கபரிமளகளப
கஸ்தூரி குழமுமென்னக்

கனகநவரத்னமய பூஷணம்பூண்டுகிளி
கையின்மிசை யேந்திநலமாய்
பச்சைமயில்போலவீதி வேணிக்குமிருசரச
பரியாச நகைபுரிந்து
பண்பான மேடையுப் பரிகையினிலிருக்கும்
பரத்தையுண் டாவளென்றால்
வச்ரதரனுலகத்த ரம்பையிலுமதிகமா
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௧

## பிரௌடை வேசையரியல்பு.

ஆசையுடனொருவிக புருஷன்வந்தான்மிகு
மாசார வுபசாரமா
யாசனங்களிலெழுந் தருளுமென் றருகிருந்
தழகான வொருகட்டிலே
நேசமொடுதாம்பூல முதவியேயவனுடைய
நெறிகண்டு வரவழைத்து
நீதியாயந்தநாள் வந்தீர்பின்னெனை
நினைத்திலீ ரென்கோவென்று
பேசியசங்கீத சரசசல்லாபப்ர
சங்கமொடு ரதிகேளியில்
பிரியமுடனேயணைந் தின்பமாயுசிதம்
பெறிற்ப்ரௌடை வேசையென்பார்
வாசமிகுபைந்துளப மாலையணிமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## பரத்தையரிழிவு.

விலைமாதர்வீடுசவுளிக்கடைபடுக்கையது
மேவுமனை போதலம்பலம்
மெத்தையதுசந்தியிற் டாறையவரங்கமோ
மேவியபடித் துறையதாம்

கலைமருவுமவரல்கு லோடம்பிருகொங்கை
கடையிலெனு மிச்சமபழம
கனிவாய்படிக்கமிகு தனைகடண்ணீர்ப்பந்தல்
கட்டுகத லிக்கம்பமாம்
மூப்பமார்புவாடைக் குகிரைமிடையேயணிபவர்
மோகமெனி னெட்டிக்கனி
மொழிமுயற்கொம்புசே ரிவபுவெங்கோரமைய
முறைகமயினை கண்டிருநதும்
மலைவுபெறுவார்களவர் வார்த்தைதக்குரேயனே
மணவாள நாராயணன்
மணதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௫

சரீர நிலையாமை.

ஆகாயமீதினி லெறிநககிலைகாற்றினை
யடைவைக் கிடுதருகதி
யனலிட்டமெழுகுவயி லிடையிட்டவெண்
ணெய்சுழியாற்றிடை யெழுந்தகுமிழி
மோகவிகாரமொடு வருகின்றயின்னல்விழி
மூடுதுயில் கண்டகனவு
மோதிவருகாற்றினிற் றீவிழுந்திடுபஞ்சு
மூச்சோடு கின்றபதமை
மீகாமனில்லாத கப்பல்கண்ணிமைபோல்
விளங்கவரு தேகமிதனை
மெய்யென்றுமெய்யெலாம் பொய்யென்றுதிரிகின்ற
விழலனெனை யாளநினைவாய்
மாகாளமுகிலனைய மெய்யனே துய்யனே
மணவாள நாராயணன்
மனைதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௬

நல்வினைசெய்வார்பேறு.

ஓதுமாதாபிதா குருதெய்வவிசுவாச
முடனிதி பூசைசெய்வோ

குற்றபாதாரசோ தரமாகுவோரிந்த
மொருவர்க்கு மெண்ணிலாதோர்
பூதையவுள்ளோர் சகாயமேபுரிகுவார
பொய்யிலா வாய்மையுடையோர
பூர்வமாந்தருமபரி பாலனம்பண்ணுவோர்
பூஞ்சோலை நந்தவனம்
பாதையிடமண்டபங் கூபந்தடாகநீர்ப்
பந்தர்முத லாய்ப்புரிகுவோர்
பண்பாமிவர்க்குமலை போல்வந்தவினையெலாம்
பனிபோல நீங்கிவிடுமாய்
மார்தவமுகுந்தவுன் பாதமேபெறுவர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௭

மாதர் அவயவமயக்கு.

நெக்குமிகவோறுகின்றகுழன் முகிலென்பர்
திருநுதலை மாறுகவாய்
செம்பவளமென் பாசலி கொண்டுநீர்மாறுத
சிறுகாசி குமிழதென்பர்
பக்குமதன் றிவிழு வின் றமுலையானதோற்
பையமக மேருவென்பர்
பாராதகரகத் துவாரமாங் குழிதனைப்
பகரின்ப வாரியென்பர்
மிக்குவருநாத்தழுஞ் சீயுமென் பும்போர்த்த
மேனிமலர் மாலையென்பர்
மீளாதகரகந் தருஞ்சிறியவின்பமதை
மேலின்ப வீடென்பரிம்
மைமக்கருங்கடலிலலை விழாமலாளுவாய்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௮

## நிதியின்பெருமை,

வித்தையேசெய்திடுங் குருபீடமொன்னலரை
வென்றுயரு கின்றதளவாய்
மித்திரர்கள்பகைவரா மேலவர்களேயார
விந்தைபுரி தாருபதி
புத்திகலமேசொல்லு மதிமந்திரியவரும்
புகழ்கின்ற வசியகுளிகை
புனகமுலைமாதருக் கதிருபவின்பம்
பொருந்தவரு காமதேனு
நித்தனும்பெருமையே செயுமரசதான்மொழிவு.
நிலைசெயத் தக்கசூத்ரம்
சேர்ந்தமிடியென்கிற மாதங்ககேசரி
தினத்துமெல் லாங்கொணர்ந்தே
வைத்திடுங்குலதெய்வ நிதியன்றிவேறுள
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௮௧

## உயர்ந்தபொருளிருக்குமிடத்து இழிந்த பொருளிருக்குமெனல்.

கோகனகமலர்மலர்ந் துறுகின்றவாவியிற்
கொட்டியு மலர்ந்திருக்குங்
கோகிலந்தொனிசெயுந் தேமாவனந்தனிற்
கூறுவாய்ப் பக்ஷியுறையும்
ஏகமெனவுலகம் புரிந்தமன்னவர்சபையி
லீனமன் னருமேவுமா
திலகுமாணிக்கங்கள் விற்கின்றகடைவீதி
யிப்பாலை மணியும்விற்பார்
பாகனையமதுராச லளிதப்ரபந்தகவி
பாடுமன்னவர்கள் சபையில்
பழங்காடிதனிலும் புளித்தபுன்கவிசொல்லும்
பாவலரு முண்டுகண்டாய்

மாகனகமுறையுமொரு மணியணியுமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடநாயனே. ௬௰

## சேர்ந்தவினத்தின் குணம்பெறுவோர் பெருதோ ரிவரெனல்.

சோதிநவரத்நமணி மாலையிடைநாலுந்
துலங்குமணி யாய்விளங்குங்
களாப்பழந்தன்னுடன் சேர்ந்தசெம்பொன்னுங்
குருப்புபோலவே மிகுக்கும்
வீதிபெருகுப்பையி லிருந்தாலுமாணிக்க
மெய்ப்பழக் காதொளிவிடும்
மிகவுஞ்செழுந்தேன் சொரிந்தேவளர்க்கினும்
வெள்ளுள்ளி நாற்றமாறா
காதலாய்ச்சேர்ந்தவினங்களைப்போலவே
பணியிலிருப்பவர் சிலபேர்
நார்சொல்லினுந்தங்கள் சுயம்குணம்விடாமலே
யமைவற்று வாழ்வர்சிலபேர்
மாதாதுகில்கொண்டொரு குருந்தேறுமாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடநாயனே. ௬௧

## வல்லோர்க்கும் பல்லோரால் தாழ்வு வருமெனல்,

பாகாசர்வச்சிரமகு டந்தகர்த்திடுசத்தி
பஞ்சமெத்தைக்கு நாணும்
பணிராசர்வணிமுடிகள் சிதறநடமிடுதோகை
பச்சோந்தி யாலடங்கும்
கரராசமார்த்தாண்ட சந்திரகிரணங்களொ
கட்செவி றன்மறைபடுங்
கனைநதபுரிவிகட்தட மத்தமாதங்கமொரு
கனல்சிறுது கண்டுபயமாம்

சராசரசங்காப்ரவாகமிருந்துமொரு
துய்யசிலையாண்மறிபடுஞ்
சொல்லின்றபெரியோர்களென்றுமப்பாரற்
றோல்விகொடுமறிவர்கண்டாய்
வராசதசரத மகாராசபுத்ரனே
மணவாள நாராயணன்
மணநிறைந்தபலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௯௨

## நல்லோர் புகழ்நிலை பேறு.

விசயன்மனுவுடனிட்சுவாகு குசநாபன்
விருட்சிரகு காகுஸ்தனும்
மிகுமம்பரீஷன்மாந் தாதன்முசுகுந்தன்
விசாலனை இரணயிந்து
சசியிந்துவொடுதிலீ பன்னரிச்சந்திரன்
சர்வதா மன்பாரதனே
சந்தனுநளன்சத்ய விரதன்பகிரதன்
சகரனொடு தானசன்னன்
தசரதன்மருத்துப் புரூரவன்சென்னியே
திரிசங்குமுடன்யயாதி
சத்யசேனன்வீர சேனன்றுருபனமித்ர
சேனன்விதுரன்பாண்டவர்
வசுதேவனாதியோர் புகழுன்றிநின்றநிலை
மணவாள நாராயணன்
மணநிறைந்தபலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. ௯௩

## நியோபதிநிலை பேறு.

சூரனொடுபானுகோபன் றிரிபுரத்திரோர்
தாரகனை மதுகைடவர்
துந்துமகிடாசுரன் சம்பரசலந்தரர்
தூஷணன் றிரிசிரகரர்

வீராவணகும்ப கர்ணனிந்திரசித்து
மிருகனைக விராலியாட்சன்
வெய்யவாதாவிவில் வலனுடன் சூர்ப்பநகை
யேவுமசமுகி தாடகை
தாருலவிசிசுபால தந்தவக்கிரர்சார்
சந்திரு டடம்பிசகன்
சகுனிதுரியோதனன் கஞ்சன்முதலாயினோர்
தங்களைப கீர்த்தியல்லால்
வாரிசூழ்புவியிலவர் கொடுமைகிலேவின்றதோ
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவெங் கடராயனே. ௬௮

## வானப்பிரஸ்தன் முதலானோரியல்பு

ஒருபொழுதுமலமே யிராமனைற்கருமங்க
ளுணர்வுடன் செய்துமனையா
ளொடுகொடுமின்றியுன் பாதங்கள்போற்றிவரு
முறைவன்வானப் பிரஸ்தன்
கருமமுடனுல அபக வற்கைத்துதிசெய்து
காயமுதலாமூன்றுங்
கருகாமலொருபோது சுவைக்கிபேபுண்ட
கருணையோன் சன்னியாசி
இருவினையுமவைசெய்த தஞ்செயச்செய்வது
மின்பமுங் கனதுன்பமு
மெண்ணியசாதிமா பும்பலவுமுன்செய்கை
யென்றெண்ணியடிகடொழுது
வருமவினையலதாத மெய்ஞ்ஞானியென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவெங் கடராயனே. ௬௯

## உத்தமர் முதலானோர்கள்.

விநயமுடனன்னமுஞ் சுகமுமேஷமுமென்ன
வித்தையுற தன்னையறிவார்
மிருகாமழகற்பகங் கன்னன்மலர்போன்மரபு
விதமாய் விளங்கவருவார்
பனையினெடுகொளிகோங்கமுக மென்னவே
பரிந்தவர்க் கன்புகூர்வார்
பனசமுஞ்சூதமும் பாடலமுமன்னவே
பண்பினுட னுதவிசெய்வார்
சினமருவினீரொழுந் தொடுமணலெழுத்துடன்
சிலையெழுத் தெனமாறுவார்
செப்புமிவாதமையாதி யங்கமாப்பார்க்கவே
சித்தைதனி லாய்ந்துபுவிமேல்
மனிதருத்தமர்கன்மத் திமரதர்மூவர்காண்
மணவாள நாராயணன்
மணநிறைநயலர்மேறு மங்கைமணவாளனே
வரதவேங் கடாரயனே. ௬௬

## தேசங்களின் பெயர்கள்.

அங்கமத்திரமாள வங்காளவங்கேகக
யாரியம் பாரினை
மாந்திரமாடமே கன்னமிடங்கண
மலந்திரெம் சேகிதகுகம்
கங்கைநிகழ்காஸ்மீர மச்சங்கொடாடங்
கருசமே குடோசனம்
கலிங்கமொடு வங்காள கேபாளசிங்களன்
கனத்ததுளு வங்கோளம்
கொங்கணைப்பேடாங்கி கர்த்தப்புளிந்தங்
குளிங்கம் கிராடமகமின்
கூர்ச்சரமபப்பாம்வி கற்பகாம்போஜசந்
கோசலஞ் சிந்துகொளடம்

லங்கமும்பணிகின்ற கருடகிரிவாசனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௬எ

## தேசமுதல் அண்டமளவாக நிற்குநிலை.

ஒட்டமுறுசாதகஞ் சவ்வீரபாஞ்சால
மோங்குநிட தங்கடார
முகந்தாஞ்சோனகஞ் சீனகாந்தாரமோ
டிலாவுமலை யாளவங்கம்
இட்டமுறுத்ராவிடஞ் சோளபாண்டியமாதி
யெண்ணேழு தேசமாகி
யிலங்குகாதக்கண்ட மாதிநவகண்டங்க
ளெய்ந்தசம் புத்தீவுமே
அட்டதிசைபெற்றதி லேழுபூலோகமிரு
தாதிமே லேழுலோக
முதலமேயாதிகீ ழேழுலோகங்களிவை
யவையுமீ ரேழாண்டமாம்
மட்டிலாவண்டங்க ளுன்றிருவயிற்றிலுரு
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. ௬அ

## பதினெண்கணங்களிவையெனல்.

தேவருடனசுரர்கள் சித்தர்கடயித்தியர்
சிறந்திடும் புருடர்கருடர்
செய்யகந்தருவர்கின் னரவிராக்கதபூதர்
திகழ்வே தாளர்முனிவோர்
மேவுவிஞ்சையருரக ரங்கரியக்கதே
மேலுமா காசவாசர்
மிகுபோகபூமியோர் முதலாயபதினெட்டு
விதமான கணநாதரும்

பூவையர்களுக்கண்டு துதிசெயுந்திருமலை
புகழ்ந்தகோ ணேரிமூழ்கிப்
போற்றியுன்சந்நிதி வணங்கியேதுதியாத
புன்சனன முஞ்சனனமோ
மாவலியளித்தசெம் மணிமகுடபாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. கக

## பரமபாகவதராவாரிவரெனல்.

சுகனொடுவியாசன் பராசரனொடுசவுனகன்
றும்புரு நாரதன்வசிட்டன்
அங்கவான்பீஷ்மா வவிருக்குமாங்கதன்
சுக்ரீவன் மாருதி
ததிபிட்சவாருவிடுமனுடன் பிரகலா
தன் குசே லன்விஜயனே
தருமனொடுமுசுகுந்த னக்ரூரன்முனி
ஜடாயுவட னம்பரீஷன்
அகலிகிரிசடைமாது பாஞ்சாலிசபரிமு
னைமுத்திடக் கஜராஜனே
யாதிராமாநுஜன் றிருவரங்கத்தமுத
ராழ்வார்கள் பன்னிருவரும்
மகிமைபெறுமுன்றொண்டர்பாதமேதுணைகொள்ளு
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே.

## அடியார்க்கு வருஞ்சிறப்பு

உனதுபாதம்போற்று மடியார்கள்சிந்தையி
லுவந்துநீ யென்றுமுதவா
லுன்னுடையதிருமாத ரென்மருஞ்சேர்வரவ
ருற்றநா னிதிகள்சேரும்
கனிதிகள்சேர்ந்திடத் தனதன்வருவானுடன்
கருணைபுரி நேயன்வருவான்

காதலனைடுத்ததா ழுமைமவருவளன்னையாழ்
கந்தன்வரு வன்மருகனல்
தனதுமாமன்வருவ னாசன்வரலாலமார்
சகலருங் கண்டுவருவார்
தருமஞ்செழிக்குமருள் சேருமதவன்றியே
தவமொன்று செயல்வேண்டுமே
வனசரோருகமலர் மடந்தைவளர்களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடநாயனே. ௱௧

## அவையடக்கமும் பிரார்த்தனையும்

ஒருமலையெடுத்துமலைத சாந்தவாமனதேவ
ருபயபத சேவைதனையே
புளங்கொண்டுவெண்மணியில் வாழுமுத்தரையு
னுவநா ரணைபாரதி
பொருமலைபெருங்கங்கை யுங்காளியாறும்
பொருந்துகடல்போற் புலவர்கள்
புகழ்சபையிலெனதுவேங் கடசதகநீதிநெறு
புகலவரு நூறுகவியும்
பகவினுடனைவருங் கேட்டியன்றமிழின்மேற்
பக்ஷம்வைத் தாளவருவாய்
பாலகன்புன்சொலைக் கேட்டுமேயகிழுமவள்
பார்மீதி லன்னையலவோ
வருபவர்களிக்கநல் வாழுதவுநேயனே
மணவாள நாராயணன்
மனதிலுறையலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடநாயனே. ௱௨

## திருவேங்கடசதகம்.

முற்றிற்று.

கடவுள் துணை.

# மலையாள மாந்திரீக அரிச்சுவடி.

## விளம்பரம்

இதனால் சகல மானவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்; இதுகாலபரியந்தம், அகப்படாமல் யிருந்த மலையாள மாந்திரீகத்தை அநேகர் வேண்டுகோளின் பேரில மலையாள சுவாமி மார்களிலொருவராகிய ம-௱-௱-ஸ்ரீ. வேலாயுத சுவாமிகளால், எழுதி முடிவு பெற்ற யெந்திரங்களும் அதற்குரிய பீஜாக்ஷரமூல மந்திரங்களும் புதிதாய் அச்சிட்டு யிருக்கிறது இன்னும் மற்றபுஸ்தகங்களு மிருக்கிறது வேண்டியவர்கள் நேரிடமாவது வி. பி. மூலியமாவது பெற்றுக் கொள்ளலாம்.

| | |
|---|---|
| மலையாள மாந்திரீக அரிச்சுவடி. | 0—4—0 |
| சந்தமஞ்ஜரீதேவி நாடகம | 0—4—0 |
| ஞானக்கோர்வை-2-பாகம் சேர்ந்தது | 1—0—0 |
| நாலாயிர திவ்ய ப்ரபந்தம | 2—0—0 |
| தெ. வடகலை | 2—0—0 |
| ஜாதகசித்தியென்னும் அனுபோக ஜோதிட ப்ரமரகசியம | 0—12—0 |

இப்படிக்கு.

ம-மாதவ கிருஷ்ண முதலியார்.

நெ-11-தாண்டவராயப்பிள்ளைத் தெருவு.

சௌகார்பேட் போஸ்ட்.

சென்னை.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

மணவாளநாராயண சதகமென்னும்

# திருவேங்கடசதகம்

காப்பு.

செந்திருவாழ் மார்பன் திருவேங்கட சதகம்
பைந்தமிழா னீதிநெறி பாடவே—வந்தருளுங்
கார்முகமஞ் சங்கத்தான் கைத்தாமரையணிந்த
கார்முகமஞ் சங்கத்தான் காப்பு.

—(※)—

தனியன்

ஓங்குதண் டலைசூழ மேகமலை தேன்சொரியு
மோமனூர் வேங்கைபூப
ஆதவுமண வாளநா ராயணன் களமூரி
ஊலகநீ திக்கேட்கமுன்
தேங்குநீர் வயல்சூழும் வெண்மணியில் வாழுமயர்
செல்வன் மூதகாரையனுர்
செழுந்தவ முதித்தநா ராயணபாரதித்
திருவேங்க டச்சதகமே
பாங்குபெறு முலகுளோர்க் கிருகண்மணி யாகவிருட்
பானுவிரு வழிவிழியதாம
பவக்கடல் கடக்கவரு வங்கமாம் பொங்குமொளி
பரவுமெய்ஞ் ஞானவழியாம்
சங்கிக பாத்தினைய தாமிதை படிப்பவர்க
ளியல்வேங்க டேசரன்ற
னிசையருளை யுற்றநல மேபெருகி வாழுமவ
ரொழுபொன்மலை போல்வாழ்வரே.

—(※)—

# திருவேங்கட சதகம்.

## நூல்.

### கடவுள்வாழ்த்து.

பூமேவு திசைமுகனை யுந்திதனி லீன்றதும்
புதிதவே தாகமமெல்லாம்
புருடோத்த மன்றெய்வ மென்பதும் பூசுரர்கள்
புரியுபக் கிரசுருமமுந்
தேமேவு மலாமங்கை மார்பிலவளர் சீருஞ்
செகந்தனை காத்தருள்வதுந்
தேவர்முதன் மிர்கசெந்து பட்சிசிலை மாமுஞ்
செழிக்கப் பதந்தருவதும்
பாமேவு பொருளலங்காரஞ் சிறப்பதும
பலவிதமு நீயென்றதாற்
பரதெய்வமுண்டென் றிருப்பார்களெந்நூல
படித்தவித மோதெரிகிலேன்
மாமேவு பைந்துளப மாலையணி மார்பனே
மனவாள நாராயணன்
மனைதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௧)

### அந்தணர்சிறப்பு.

சீலமிகு மாகம புராணமனு நீதியுந்
தேர்ந்துமெய்ஞ் ஞானநிறைவார்
செய்கின்ற யாகாதி மந்த்ர கருமங்களாற்
றேவர்க்குமுதவி செய்வார்
காலமுத லாகிய ப்ரமாணங்கையிற்
கனிபோல வேகாட்டுவார்
காயதரி யகினமயாற் சகலதீ வினைகளுங்
கனவிட்ட பஞ்சுசெய்வார்
ஞாலமிசை திங்கண்மும் மாரியங் கொற்றவர்
நடாத்துசெங்கோல் வளமையு
நாடுகள் செழிப்பதுஞ் சகலதரும மும்வேத
நாயகர்மகத்துவங்காண்

வாலகரு டன்பண்டு கண்டகதை யல்லவோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே. (௨)

அரசர் சிறப்பு.

சீருலவு மனுநீதி மந்திரிசொ றன்புத்தி
தேசத்தியற்கைநான்குந்
தேர்ந்துசெவி விழிமனது மூன்றினும் பொறுமை
சேர்ந்துசெங் கோல்செலுத்திக்
காருலவு கமலமுங் குமுதமுங் காலங்கள்
சார்ந்துமலர் கின்றவிதமுந்
தந்தியொடு முதலையொரு தானபல முங்கண்டு
தரியலரை வெற்றிகொண்டு
பாருலவு கெடிசேனை தனதானி யஞ்சகல
பாக்கியமு மிகவிளங்கப்
பற்பலதன் மங்களோடு கீர்த்திப்ரதாபம்
படைத்ததிற லோனரசனும்
வாருலவு தனமங்கை மனமகிழு நாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௩)

வணிகர் சிறப்பு,

இடமுடன் றன்பன தறிந்துவா ணிபமதே
செய்வரா தாயமிஞ்சிச்
செலவுசெய் யார்யாவர் வருகினுங் கண்டபடி
தேர்ந்து நிறை போலுரைப்பார்
அடகுதக் தானுமரி யாதையில் லாருக்
கரைக்காசு கடனுமுதவா
ரனமனு நீதியுடையோர்களுரை வாய்மையா
லளவிலாதே பொருள்கொடுப்பார்

கடுகுதனி லெட்டியொரு கூறுவா வெனினுங்
கணக்குமுறை தன்னில்வழுவார்
காரிய விசேஷமதி லொருகோடி யுதவுவார்
கருணைவர்க் தகர்பெருமைகாண்
வடமலை தினம்பாவு தென்மலைக் கதிபனே
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௪)

வேளாளர்சிறப்பு.

அந்தணர்கள் தருமமுஞ் சராசர் புசபலமு
மலனிவர்த் தகலாபமு
மனைவர்க்கு மேன்மையுந் தருமமுந் தானமு
மன்புமங் கையரின்பமும்
புத்திதெளி வியமமுஞ் சாத்திரமு மாகம
புராணமொடு சகலகலையும்
பொய்யாத வுண்மையுங் கீர்த்திப்ர தாபமும்
புகழ்கின்ற தேவர்கிலோம்
விந்தைபுரி மானமுங் குலமரபு நீதியும்
விதரண முதற்சகலமும்
வேளாளர் குவளைபுனை காராளர் தங்களுடை
மேழியின் பெருமையன்றோ
மந்தர மெனுமபுய சவுந்தர முகுந்தனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௫)

புருஷராய்ப்பிறந்தோர் பெறுபயன்.

புருஷராய்ச் சன்மமெடுத்தபேர் மெய்ஞ்ஞான
போதத்தை யறிவதொன்று
பூமியொடு மிக்கதன வானவ தொன்றலது
பூவைஞ் செய்வதொன்று

தருமவானென்று மிகு கீர்த்திமானென்றுநற்
சற்குண விவேகியென்று
சகலருமபுகழ்கின்ற வித்துவானென்றுரண
சங்க்ராம வீரனென்று
சருணைசேரிந்தவகை யில்லாத மனிதரைக்
காசினியிலேன்படைத்தாய்
கருதுதாயுதமும் பார்க்கின்ற பேர்களிரு
கண்களுஞ் செய்தவினையோ
மருவுலாவியதுளப மாலையணி மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே, (௬)

நகரச்சிறப்பு.

பாகதகீ தப்ரபல வேசியர்களாடலும்
பாடலும் பெருகோயிலும்
பலவாவி மண்டபங் கோட்டையரணங்களொடு
பலர்மேவு கடைவீதியும்
இரதகச துரகம்ப தாதிசதுரங்கபல
மேற்கின்ற தளகர்த்தனு
மெண்ணமிகு மந்திரிப்ர தானிதானுபதிய
ரியனுத்தி யோகசயனமும
விரதமறை யோராதி நாற்குலமுமொன்றென்று
மிக்கசோடசதானமு
மேலாய்ச் சமீபித்த நதியுமாய் மநுநீதி
வேந்தனும் பெறுபட்டணம்
வாதருரை சிங்கபட்டண மெனச்சொல்வர்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே. (௭)

## அரசர்க்குரிய தொழிலாளரியல்பு.

காரியா காரியங் கொற்றவர் தெரிந்திடக்
கண்டுசொல் வோன்மந்திரி
காலமுந் தன்பலமு மெண்ணியிகல் வென்றிடக்
கருதுவோன் றளகர்த்தனும்
சீரிய தலங்களொடு ராச்சியஞ் சகலமுந்
திட்டமிடுவோன் ப்ரதானி
செய்ய வாசகதாட்டி யவதான வக்கணை
சிறக்குமவ னேராயசன்
சூரியன் றிசைமாறி னுந்தான் றொடுத்தவத்
தொகைவிடான் கருணீகனுஞ்
சொல்வன்மை சபைவன்மை பராசர் வன்மை
சுமுகனே தானுபதி [தெரி
மாரியது காதகருளு மணிமேக வண்ணனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (அ)

## இதனி லிஃதுள தாமெனல்.

அதிகார மதுவந்து சேரிலெவ ருக்குமே
யதிகவல் லமைசளுண்டா
மாடை யாபரணங்கள் சேரிலெவ ருக்குமே
யழகுபெறு வளமையுண்டாம்
நிதிமேவு செல்வமது சேரிலெவ ருக்குமே
நிறைகின்ற மேன்மையுண்டாம்
நெஞ்சமகிழ் விதரணஞ் சேரிலெவ ருக்குமே
நிலைபெற்ற கீர்த்தியுண்டாம்
துதிமேவு பத்தியது சேரிலெவ ருக்குமே
தோன்றவரு தெய்வமுண்டாஞ்
சுகமிக்க பருவமது சேரிலெவ ருக்குமே
துய்யமண வாசையுண்டாம்

மந்தரோ ரிலைக்குமுத மலரா திருக்குமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே. (௯)

அரசிடத்துப் பெறத்தகும் வரிசைகள்,

சுற்றமொடு தானுநம் பினபேரு மின்பமாய்ச்
சுகமுறிற் புரவியமையுந்
துய்யசரு மங்களொடு கீர்த்திப்ர தாபந்
துலங்கினற் சிவிகையமையும்
கொற்றவர்கண் மெச்சவே பரராசர் கெடிவெற்றி
கொண்டுவரி லானையமையுங்
குறையொன் றிலாமனிறை புகழ்பெற்றவீரர்முன்
கூறுங்கை வாளமையும்
உற்றதகை யிவையெலாம வேந்தர்சன் மானமுட
னுதவாம லேயெற்றிடி
லுறைகொண்ட நாடகந்தன்னில்வரு கோலமுட
னூர்வலஞ் செய்கோலமும்
மற்றவர்கள் சரியென்று சொலவர்காண்
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௰)

பிதுர்வாக்கிய பரிபாலனமுதலியவற்றால் வருநன்மை,

தந்தைதாய் வாக்ய பரிபாலனம் புரிவதுந்
தான்சொன்ன படிசெய்வதுந்
தவறாத விரதமும் பொய்யாத வசனமுந்
தானமுங் கனபொறுமையும்
சிந்தையகிழ் மரபினோர் செய்தொழின் முடிப்பதுப
தேவதா விசுவாசமுஞ்
செய்தபேர் பரசராமன் கவச குண்டலன்
செயராம னெடுவீடணன்

அந்தமிகு சொல்லரிச் சந்திரன் மாபலி
யடறரும னுடுபகிரத
னருள்பிரக லாதனிவர் போற்பெருங்கீர்த்தியொடு
மவனிமிசை நீடுவாழ்வார
வந்தமலர் போற்றவளர் சேஷகிரிவாசனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௱க)

சூதுமுதலியவற்றால் வருந்தீமை,

சூதுபெறு வித்தையும் பரதாரமோகமுஞ்
சோதான் றனைபிகழ்வதுங்
துலங்காத புத்தியு மடங்காத வார்த்தையுஞ்
சொல்லிச்செ யாகதிறமும்
தீதுபெறு வஞ்சமும் மதங்களும் பிறருடைய
திரவியந் தனிலாசையுங்
சிந்தையக மெனுமகங் காரமும் பெற்றபேர்
சீர்நளன் கீசகன்றான்
மீதுபொரு வாலிசக ரன்குமரன் சிசுபாலன்
வென்றியுத் தான்வில்லவன்
விந்தைபெரு துரியோத னன்சனகன் முன்பெற்ற
விதமுற் றிருப்பர்கண்டாய்
வாதுபெறு தரவளை மோதுமொரு திகிரியாய்
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௱உ)

சாதிமுதலானவைகளின் குணமே சிறந்ததெனல்.

தடவரை யதன்மீது விளைவிலுஞ் சோளமது
சன்னசம் பாவாகுமோ
சந்தத மும்வாடா திருந்தாலு மெட்டிமலர்
சாதிமல ரிகையாகுமோ

கடலெலா நிறைவெள்ள மாயினுஞ் சுவைபெற்ற
காவிரியினாற் றாகுமோ
காகங்கள் கோடிதொனி செய்தாலு மொருசிறு
கருங்குயிற் றொனியாகுமோ
படர்கின்ற பேய்ச்சுரை சொரிந்தபழ மூந்திரிப்
பழமதற் கிணையாகுமோ
பகர்கின்ற சாதி ங்கனவயது மேன்மையும
பலகூட்டமுந் தேகமோர்
வடிவதிக மன்றுகுண மேயதிக மென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (கரு)

செல்வத்தால வருமுயர்வு.

செல்வமது சேரிலோ வெங்குபேர் வேங்கனுந்
திரளாகில் வேங்கடனுமாஞ்
செயல்கொண்ட வேங்கடா சலனுமா மையராந்
திங்கிளைய ரவர்களாகும
நல்வரிசை சொடுதான டச்சிடுங் காரிய
நயந்தது தாகுமப்பா
னல்லோலை கிள்ளாக்கொ டொப்பமேலொருவசன
நவிலுமுன் கப்பமிடுவோர்
சொல்வண்மை வாவென்ற பேர்வாரு மென்பார்
சுவாமியாம் தேவரீரத்
துதிபெற்ற தேவரீ ரவர்களாங் காணுமுன்
றொழுதெழுந் தாளுமென்பார்
வல்விதம் பெறுபாம லோமியர்கண் மீண்டனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (யச)

வறுமையால் வருமிழிவு,

அதிக்கின்ற மனைவியையுங் குறைசொல்வடங்கைதாய்
சோகமுற வசைகூறுவார்
துன்பமொடு மனமெலியும் மேனிவெற்றுருவமாந்
தொலையாத கவலைவளரும்
உதிக்கின்ற புத்தியு மழுங்கிடுங் கல்வியோ
முதரத்தி லிசைபசியா
றறவின்முறை யாருமொரு வார்த்தைசொல்லார்
அத்தரமு மொருவர்கேளார் [சொன்ன
விதிக்கின்ற வுலகத்தி லெல்லாரு மிகழுவார்
மிடிவந்து சேர்ந்தென்றன
மேன்மையே தறிவேது குலமேது நலமேது
வித்தையே தேவாதிவாகாண்
மதிக்கின்ற வுன்பதம போற்றிலவை சேருமோ
மணவாள நாராயணன
மணிநிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௧௫)

உடனே கண்டிக்கப்படுபவர்கள்,

முடிகொண்ட கொலையாளர் களவிகளோர் சாதிநெறி
முறைமை வழுகின்றதீயோர்
மூர்க்கமுறு பகையாளர்வெகுசனவிரோதியர்காண்
மொழிமாறு சோணுரைப்போர்
மிடிகொண்ட பேரைக் கெடுத்தவோர கற்புடைப்
மெல்லியரை மேவுமபலோர்
விசுவாசகா தமிது செய்தவோர் துஷ்டமா
மிருகங்கள் மிக்கபிணிகள்
கடிகொண்ட விஷமுடன் செய்யகளை லென்னவே
கருதுபதின் மூன்றுவகையுங்
கண்டவுட னேயின்னே. யென்றெது கண்டித்தல்
கருணைமனுநீதி கண்டாய்

வடிகொண்ட தெள்ளமுத மனையகுண சீலனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (கசு)

பொறுத்துக் கண்டிக்கப்படுபவர்கள்.

கண்டுதிரு பந்தனைத் தள்ளுவோர் குருசுவாமி
காரியக் குறைசெய்குவோர்
காணு விடத்திற் பழித்துளோர் வஞ்சகங்
கருதுவோர் பொய்யுரைப்போர்
சண்டைகொடு தந்தைதாய் சுற்றமுட னனுதினந்
தவிராத கலகமிடுவோர்
தம்முடைய வலுமையா லெளியோர் வழக்கினைத்
தள்ளிய மதங்களுடையோர்
அண்டிவரு துஷ்டரொடு கூடிவினை செய்குவோ
ராகுமிவ ரெண்மர்தமையு
மாறுபோன் மூன்றுபிழை கண்டபின் கண்டிப்ப
தாசர்மனு நீதிகண்டாய்
வண்டுலவு கின்றமலர் தண்டுளப மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (க

என்றுங் கண்டிக்கப் படாதவர்கள்.

தூதாகி வந்தபேர் பிக்கதா றதிபதியர்
துதிபெற்ற தந்தைதாயார்
சொல்லுமா சாரியர் புரோகிதர் புராணிகர்
சுகந்தந்த போகமடவார்
வேதாக மங்கற்ற வைதிகர் தபோதனர்கள்
விகடப்ர சங்கமிடுவோர்
வித்தையா லுயர்கின்ற கவிராஜர் சுத்தரான்
வீரர்மர பினிலுயர்ந்தோர்

சீதான வெம்பிணி யடைந்துளோர் வறுமையோர்
சிறுவரொடு தனைநயபிறேனார்
செய்யுமிவர் பதினெண்மர் மதியாத குற்றங்கள்
செயினும் பொறுப்பதல்லால
வாதாடி யெதிர்செய்கை மன்னர்நெறி யன்றுகாண
மணவாள நாராயணனை
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே, (௧௮)

இவர் இதனால் வெல்லுவரெனல்.

வேந்தருட னேவேந்தர் வாதுவரி லேகொடிகொள
வெற்றிகொண் டேசெயிப்பார
வீரருடனேவீரர் வாதுவரி லாயுத
வித்தினாலே செயிப்பார
போந்திடு நியோகியர்கள் வார்த்தை யுசிதத்தாற்
பொருந்தவே வாதுவெல்வார்
புலவர்க்கு வாதுவரின மாபெலாம் வசைசொலிப்
பொருவிலக் காறசெயிப்பார்
சாரதமணி வேசியர்கள் வாதுவந் தாற்பரத
சங்கீத மொடுசெயிப்பார்
சரசகவி ராசர்பிர சங்கத்தினால் வாது
தன்னைச் செயிப்பர்கண்டாய்
மாந்தளிரை நிகர்மேனி ராதையது மோகனே
மணவாள நாராயணன
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங கடராயனே. (௧௯)

இக்குற்றத்தாலிது பயன்படாதெனல்.

செயல்கொண்ட மானமது பங்கமா னுற்றிரு
செழித்தென்ன மாறிலென்ன
செய்யருண வின்பாச மில்லாத மங்கையைச்
[illegible]ந்தென்ன நீங்கிலென்ன

இயல்கொண்ட கீர்த்திமரியாதையில் லார்களை
யிகழ்ந்தென்ன புகழ்ந்துமென்ன
விடருற்ற போதுதவி செய்யாத பேர்நட்
பிருந்தென்ன போயுமென்ன
கயல்கொண்ட விழியினுள பேரிளம் பெண்கொங்கை
காட்டிலென் மூடிலென்ன
கருணைகொண் டொருவருக் குறையாத பேர்வித்
கற்றென்ன மறக்கிலென்ன [தை
வயல்கொண்ட பயிர்மேனி புயல்கொண்ட களமூரின்
மணவாளநாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உ0)

இவையெல்லாமளவுபடினு மாசையளவுபடாதெனல்

பொங்குநதி மணலுமா காயத்தி னெல்லையும
பொழியுமழை யின்றிவலையும்
புடவிமிசை வருசனமு மடவிமிசை வளர்மரமும்
பொருப்பின்மிசை யுற்றசிலையும்
திங்களுட னுற்றதா ரகைகணமு முன்பாத
சேவைசெய் வோர்பெருமையுந்
தெரிவையர்கண் வனமுமுனை வினையாத பலமூடர்
சென்மமுங் கடலாழமும்
அங்கசன் கருணைபுரி மோகமுங் கவிராஜ
ரருள்பெற்ற புத்திநலமு
மளவுகண் டாலுமோ மனிதருறு மாசைதனை
யளவிடக்கூடாதுகாண
மங்கைமிது லாபுரி மடந்தைமகிழ் நேயனே
மணவாள நாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (உக)

## இன்னார்க்கு இதுவில்லையெனல்.

காதன்மிகு காமுகர் தமக்குமுறை யில்லைவஞ்
சகர்க்கு மரியாதையில்லை
கட்டுண்ட கள்வருக் குறவின்முறை யாரிலை
கசடர்க்கு ஞானமில்லை
வேதமறி பூசுரர் தமக்கருள்செ யாரில்லை
விரோதிக்கு நேயரில்லை
மெய்ஞ்ஞானி யர்க்குவரு சாதிகுல மொன்றில்லை
வீரர்க்கு மனபயமில்லை
போதமிகு யோகிக்கு வினைசெய்கு வாரிலலை
பொய்யர்முன் சாட்சியில்லை
புலவர்க்கு நேயமில் லாரில்லை செல்வனைப்
போற்றிலா வொருவரில்லை
மாதவெழில் கண்டுமன மகிழாதபேரில்லை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௨௨)

## இது இவ்வாறுயின் இதுவாமெனல்.

எழுதினது சொல்வதே ராயரொப் பந்தனைக்
கிசையுமவளே ரபையா
மிடர்வேளை யுதவுபவ னேகண்ணன் வழிநடைக்
கேற்றதே யுற்றவசுவம்
பழகிமன மறியுமவ னேயூகி யந்த்ரிநற்
பயநீக்கி னேன்றந்தையாம்
பசிபிற கிடைத்ததே யமுதமாந் துயிலினோர்ப்
பட்டதே புஷ்பசயனம்
கிழறந்து காத்ததே கற்பகந்தாசத்தி
னீர்தாகந் தேகங்கையாம்
திறைபிணி தவிர்த்ததே சஞ்சீவி தன்பட்டு
நீச்சுநீ ரேகடலதாம்

மழைமுகி லெழுந்தனைய மெய்யனே துய்யனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௨௩)

இவர்க்கு இது தெய்வமெனல்.

நீதிபுரி லோபியர் தமக்குப் பணங்களே
தெய்வமாங் காமுகர்கருத்
தெரிவையர்க டெய்வமாந் துஷ்டருக்கென்னிலோ
தீமையே தெய்வமாகும்
கீதியுடை யோர்க்குப் பயந்தீர்த்து ரக்ஷித்த
நேயரே தெய்வமாகு
நீங்காத் தரித்திரர் தமக்குங் கொடுத்தபேர்
நித்தமுந் துதிதெய்வமாம்
சாதியனை வர்க்குமறை யோர்தெய்வ மம்புவி
தனக்கரசனே தெய்வமாஞ்
சகலர்க்கு மாசாரியென் றெய்வ நாரியர்
தமக்குநாதன் றெய்வமாம்
மாதவம் புரிஞானி யர்க்குநீ தெய்வமா
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௨௪)

இது உண்டாயினும இது வில்லாவிடிற்
பயனில்லையெனல்.

எத்தனைபொருட்சுவை யிருக்கினும பத்திரச
மில்லாத கவிகளென்ன
வெண்கோடி சம்பளந் தருகினுஞ் சன்மான
மில்லாத சேவகமென்ன
சித்ராதி லீலைபல செய்யினு மிதமுண்டு
சேராத சுகமதென்ன
செம்பொன்மிகு செல்வமுண்டா யினும் பயிர்கொ
செயலிலா வளமையென்ன [ண்ட

வித்தையுளவெல்லாம படிக்கினுங் குணவினய
மேவாத பெருமையென்ன
மெய்த்துளசி யில்லாத நந்தவனமென்னவே
விளங்குமென்பார்கள்கண்டாய்
மத்தகச ராசன்மகிழ் விசய நரசிங்கமே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௨௫)

இதுஇச்சிறப்பட்டையினும் பயனில்லையெனல்.

காட்டிலின் டஞ்செடி தழைத்தென்ன காஞ்சிரங்
கனியது சிவக்கிலென்ன
கரைநாண லெல்லா மலர்ந்தென்ன காகங்
கழுத்திடை வெளுக்கிலென்ன
ஆட்டின்கழுத்திலதர் நீணடென்ன நீர்ப்பாசி
யதுபச்சை யாகிலென்ன
வற்பருக் கதிகாரம் வந்தென்ன பேடிகையி
லாயுத மிருந்துமென்ன
நீட்டமொடு கரடிக்கு மயிர்வளர்ந்தாலென்ன
நீதியறி யாதமூட
நிறைசொல்வராயென்னஞானமில்லாக் கல்வி
நெறிபோலிருக்குமென்பார்
வாட்டடங் கண்ணிபுனை கண்ணிமகிழ் கண்ணனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௨௬)

கலியுகதோஷம்.

அப்புவியின மிக்கமெய்ஞ் ஞானியைக் கண்டாலு
மதுவுமொரு வேஷமென்பா
ராகம புராணமறு நூல்விருமபார்கள்பரி
யாசகதையே மெச்சுவார்

கம்பமிசை யொருகோடி கரணமிட் டாலுமது
கண்கட்டு வித்தையென்பார்
கற்பனையலங்கார மாக்கவிகள் பாடினுங்
கற்றவர்க் கெளியவென்பார்
நம்பிவிசு வாசமொடு துதிசெய்யி னுங்கள்ள
ஞானமென் பார்களவைபோ
னைந்த கலியுக மகிமை யின்னையுஞ் சிலபேர்
நவின்று குறை சொலவர்கண்டாய்
வம்பவிழ் மலர்ச்சோலை மலையலங் காரனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங்கட ராயனே. (உஎ)

அரசரது நன்றியறியாமை.

அரசரைக் கண்டுபின் காரியக் காரருக்
கதிகபரி தானமுதவி
யதிகார மொன்றினைப் பார்ப்பவ ரிடத்திலு
மதுக்கொட்டிரட்டியீந்தும்
கருதுகினு வைப்பணங் தவனைப் பணங்கண்முன்
கடன்வாங்கி யேகொடுத்துங்
கணக்கர்செல வெழுதார்க ளுட்டார்க ளேவர்
கடன்காரர் தாமறிப்பார்
விருதுசீட் டுக்காரர் வைவார்கள் கொல்லரோ
வெயிலிடை நிறுத்தி வைப்பார்
விதமாகு மவரவர்க ளெல்லாஞ் சபாசென்ன
மெய்ப்பாய் நடந்துகொளினும்
வரிசைபெறு துரைகளவ ரருமைசற் றறிவரோ
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உஅ

கவிவாணரருமை யறிவிலலாமை.

கற்பனை யலங்கார மாக்கோவை பாடினுங்
கனவரிசை யொருமச்சடங்
கலம்பகங் கூறிலொரு தப்பட்டி பிள்ளைக்
கவிக்கென்னி லொருசோமனும்
நற்பொரு ளுலாவென்னி லுறுமாலை மடலுக்கு
நாணயம தாயொருபணம்
நலவண்ண மென்னிலொரு சாப்பாடு மாலையெனி
னன்மை தரு தாம்பூலமாம்
அற்புதம் பெறுகவிக ளென்னிற் பளாபளா
வதிலெவரு மானமாத
மப்படியு மாயிரத் தொருவரொன் றிலெங்க
ளருமை யவரறிவர்கண்டாய்
மற்பொருத மல்லரொடு முற்பொருத வீரனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௨௬)

இதனையிவரன்றி யிவரறியாரெனல்.

கீர்த்தனைக ளின்மகிமை பாகவத ரல்லாற்
கிரிக்குறவர் தாமறிவரோ
கீர்த்திப்ர தாபமுறு விதரணிக ரல்லாது
கேட்டலோ பியறிவரோ
சேர்த்தமது விக்யான நீதிமன் னவரலாற்
சிலைவேடர் தாமறிவரோ
செய்ய பகவற்கீதை மெய்ஞ்ஞானி யல்லாது
சென்மபீ சர்களறிவரோ
கோத்தமணி மாலையை மங்கையர்க ளல்லாற்
குரங்குகண் டாலறியுமோ
கொக்கோக மகிமைதனை நாகரிக ரல்லாது
கூறுபேடி களறிவரோ

வார்த்தைபுசி த்தைமந் தரிசனன்றி யறிவரோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (கூய)

பயனில்சொல்லி னிழிவு.

அகமென்று தன்னைப் புகழ்ந்தபேயுந் தந்தை
யன்னையர் வருத்தமுறவே
யயலார் தமக்குதவு பேயுமட வார்புத்தி
யனுதினங்கேட்டபேயும்
சுகமென்று பொதுமாத ரைக்கூடி மனைவியைத்
துயரமே செய்தபேயுந்
துணைத்துணைர களமற்று முறிகின்ற பேயுமுன்
சொன்னதில்லை யென்றபேயும்
செகமன்ன ராமென்ற தலையென்ற பேயுமியல்
செய்ந்நன்றி கொன்றபேயுந்
திரளான சபையினிற் பயனிலா வார்த்தையுரை
செய்கின்ற பேய்க்குநிகரோ
பகமென்று கோசிக னழைக்கமகிழ்தூயனே
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (கூக)

எல்லைக்கடத்தலின் வருமிழிவு,

அரசர்மே லாணைதனை யெண்ணாத குடிசனு
மாதாய மிஞ்சுசெலவு
மன்புடைய பேர்புத்தி கேளாத கோபமு
மளவைக்கடந் தாதரவும
சரசவகை மிஞ்சவே வந்தமரி காசமுந்
தனைமிஞ்சு தொழிலாளருந்
தவிரியந் தனைமிஞ்சு கவலையுஞ் சாக்ஷியோர்
தகைமிஞ்சு முறைமொழிக்கும்

கரசரண வவயவந் தனைமிஞ்சு தேகமுங்
கவியில்மிஞ் சியவெழுத்துங்
கருதுமுறை கேளாத மனையாட்டி புணர்நாய
கன்புகழையொக்குமென்பார்
வரசரச கவிராஜர் புகழ்வேத குலதிலக
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯௨)

இவர்க்கு அமுதம் இவ்விடத்தெனல்,

அண்டருக் கமுதமது சொர்க்கத்தில் வேதியர்க்
கமுதமது சொல்லுமறையிலே
யானைகவி ராஜருக் கமுதமணி நாவிலே
யாவினுக்கமுதமுலையில்
பண்டிதர்க் கமுது கையிலே விதரணிகர்
பங்கிலமு தங்கண்ணிலே
பாகவத ருங்கமுது காதிலே பரிவுடைய
பாங்கருக் கமுதமனதில்
ஒண்டொடிய ருக்கமுத மாமதிய மெனவே
யுகந்திடுந் தேகமெல்லா
முற்றபெரி யோர்தமக் கமுதக் குணத்திலே
புணர்வுடைய பேர்க்கமுதமோ
மண்டலமளந்தவுன் பாதத்தி லென்பர்காண்
மணவா ளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங்கடராயனே. (௯௩)

இவர்க்கு விஷம் இவ்விடத்தெனல்.

திருடர்க்கு விடமெலாங் கையிலே காமிக்கு
தெரிவைக்கு விடமுலையிலே
தீயபொய் யர்க்குவிட நாவிலே பகமுடன்
திரிவோர்க்கு விடகிதியிலே

கருதரிய கோளர்க்கு விடமுதடு
காமுகர் விடங்கண்ணிலே
கட்செவி விடங்கள்பல வடியிலே தேட்கெனிற்
கனவிடங் கடைவாலிலே
அரியதுஷ்டாக்கென்னி லெட்டிமர மென்னவே
யங்கமெல் லாம்விடமதா
மடுத்துக் கெடுத்திடும் பகைவர்வுட மனதிலே
யம்பொன்விலை மாதருக்கு
மருவுவிட மல்குலிற் றெரியவச மன்றுகாண்
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே, (௫௪)

இவர்க்குப்புண்ணியமிதுவெனல்.

உன்னுடைய பதசேவைக ண்டுபணி கின்றதே
யுடல்செய்த புண்ணியமதா
முறைகொண்ட கீதையின் சாரங்கள் கேட்பதே
யுற்றசெவி யின்புண்ணியம்
தன்னுடைய புத்திர ரளைந்தசோ றுண்பதே
சாற்றுநாவின் புண்ணியங்
தத்துவ முணர்ந்தபெரி யோர்தமைக் காண்பதே
சார்ந்தவிழி யின்புண்ணியம்
பன்னுயிர மலர்கேட்கு முன்னங் கொடுப்பதே
பாணியது செய்புண்ணியம்
பதிவிரத மங்கைகுண மிக்க புருடனும்
பலிப்பதே வெகுபுண்ணியம்
மன்னுமிவை முன்செய்த புண்ணியம தென்பாகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே, (௫௫)

இவர்க்குப் பாவமிதுவெனல்.

திருந்துகற் பனையிலாப் புன்கவிகள்கேட்பதே
செவிசெய்த பாவமாகுஞ்
செயலருமை யறியாத பேர்கண்முன் சேவகந்
திரிதல்கால்செய்தபாவம்
பரிந்தவுபசாரமா தரவிலாற் மனையுணவு
பருகலு வின்பாவமாம்
பாவனை யைந்துநதி நயமிலாப் பரதமது
பார்த்தல்விழி செய்தபாவம்
தருந்தமிழை யறியாத பேர்களிட மேற்கின்ற
தகைமை கைசெய்தபாவந்
தன்பெயர் விளங்காத பிள்ளையைப் பெறுவதே
தாய்வயிறு செய்தபாவம்
வருந்துயர முன்செய்த பாவவினை யென்பர்காண்
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே (௫௯)

இவர்க்கிவை யுளவேனு மிவைவேண்டுமெனல்,

அதிவீர னென்னினுந் தந்திரவுபாயமுட
னடையலரை வெல்லல்வேண்டு
மாயிரம் வித்தைகற் றாலுமுலகந்தனி
லடக்கம திருத்தல்வேண்டும்
நதிகோடி தீர்த்தமுந் தானுமோ டந்தனை
நயந்துகரை சேரல்வேண்டும்
ஞானதத் துவமுணர்ந் தாலுமுலகத்தினி
னடக்கைதனை யறிதல்வேண்டும்
துதிசேர் குபேரனென் றாலுமொரு லாபமுறு
தொழிலுட னிருத்தல்வேண்டுந்
துய்யவல்லமையுடைய னெனினுமொருசார்பிறைத்
துரைகளைக காணல்வேண்டுந்

மதியூகி யென்னினும் பெரியர்சொற் கொளல்வேண்டு
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (கஎ)

இவர்க்கிவை வேண்டாமெனல்.

பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
பெரியோரை முனிதலவேண்டாம்
பின்னொன்று முன்னொன்று பேசியே யவமான
பேர்கொண்டு திரிதல்வேண்டாம்
உற்றவர்கள் போலவுட் பகையான வஞ்சகரை
யொருநாளு நம்பவேண்டா
மொருவருக் கிச்சையாயப் பொய்சொல்லிப்பின்சு
வைபி லுமையோ விற்றல்வேண்டாம
சற்றுமே பொறுமையில்லாதவர்கள் சண்டையிற்
றான்போய் விலக்கல்வேண்டாந்
தைரியந் தனில்விக்ரமா தித்த னென்னினுந்
தன்னையே புகழவேண்டாம்
மற்றொன்று மெண்ணாது செய்யவேண் டாமென்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்கடராயனே, (கஅ)

இவர்க்கிவை பாவமெனல்,

அரசர்வெகு மானஞ்செய் போதுதடை வருகிலோ
வன்றுவிதி பாவமாகு
மானபெரி யோர்பழமை யாய்வந்த நேயமதை
யகல்வதே தத்தயோகம்
தருகின்ற காரியங் கைகூடி யேபின்பு
தயவில்லை இருகியாகுஞ்
சற்குண மடைந்துளோ ருத்தமரை முனிவதே
சந்திராஷ் டமதாகுமாம்

கருதிய விருந்தினுட னுண்ணுத் தனியுணவு
காணுமது வேதார்த்தினங்
கலக்கமே செய்கின்ற வினைகைக்காண்பதே
ஐசுவர்ய வேளைகண்டாய்
மரிசிரந்த வெனவந்த காசிபகுலோத்துங்க
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௯௧)

இவர் இத்தீக கோள்ளவரெனல்.

ஆரைமக்களைக்கண்டு தங்கள் காரியமெலாஞ்
சொல்லிச்செய் கின்றவேளை
சொல்லெலாம் பொய்யெனவு மிவர்சாட்சி மெய்
யெனவுந் தோன்றுவோ னவலமாகும்
திரமுற்ற கல்வியொடு குணமிக்க கவிராஜர்
திரளான ராஜசபையில்
செய்யும ப்ரசங்கத்தி லொருபழுதுசொல்லுவோன்
சென்மத்தி லங்காரகன்
அருமைபெற்ற விதரணிக னைக்காத்த னேகரு
ஞைசரித் தியல்பாகியே
யவைகொடுக்கும்போதி லிடர்சொலி விலக்குவோ
னஷ்டமச் சனியனாகும்
மருவுற றலர்ந்தவம் புயமணியுமார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௯௨)

இது இவ்வாறாயின் இச்சிறப்பிற்றுமெனல்,

தரணிமன் னவர்சபையின் மெய்க்கின்ற வரிசையே
தனதுபட் டாபிஷேகஞ்
சபாசென்று மெச்சிக் கொடுக்குமதி காரமே
சாம்பிராச்ய போகமாகும்

## திருவேங்கட சதகம்.

பரிவுட னினைத்தபடி காரியங் கூடிடு
 பதினொன்றி னிற்குருவதாய்
பங்குஜன வர்க்கங்க ளுடனுணவு செய்கின்ற
 பாக்யமே கலியாணமாம்
அரிவை குணாரஞ்சிதா தாய்வர்க்க சேநா
 ளன்றமிர்த சித்தயோக
மன்பானபெரியோர்க ளிசைஞ்செய்வதே
 யானசுப தினமென்பர்காண்
மரகதம் பூவைமுகி னீலமணி வண்ணனே
 மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வரதவேங் கடராயனே. (௪௬)

மனிதர்களிலே துஷ்டரும் ராட்சதரும் பூதரும்
இவரெனல்.

புண்ணியம் பாவமறியார்மாத வஞ்செயார்
 புகல்கல்வி நெறியுமறியார்
புனிதரைப் போற்றார்கள் பாதிரவியங்கொள்வார்
 புன்மைசேர் துஷ்டராவார்
எண்ணியொரு காரியஞ் செய்பவர்கள் வலுமையா
 லெவருக்கு மிடர்புரிகுவா
ரிரக்க மில்லார்பொய் யுரைப்பவர் வஞ்சிப்பவர்க
 ளிவர்களராட் சசர்களாவார்
நண்ணியெளி யோர்தமை வெருட்டுவார் வலியவரை
 நாடிவஞ் சனையில்வெல்வார்
நாரியர்க ளெவரையுங் கூடுவார் மிகவஞ்சர்
 நாணமறியார் பூதர்காண்
மண்ணிலொரு மூவடி யிரந்தநெடுமாயனே
 மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
 வரதவேங் கடராயனே. (௪௭)

மூர்க்கர் முதலியோரியல்பு.

மெய்யான புத்திபல சொல்லினுந் தன்புத்தி
  மேலாகினேன் மூர்க்கனும
 மிக்கபெரி யோர்களைத் தாழ்வுசெய் தற்பரனை
  மேன்மை செய்வோன்மூடனும
செய்யாத காரியம தெனினும் பிடித்தபிடி
  செய்யுமவனே துஷ்டனுந்
 திரளான நன்றிபல செய்தவர்க் கேயிடறு
  செய்பவன் மகாபாதகன்
ஐயாவெலாப்பணிந் தாலுமே சோபம
  டடங்காத வன்குரூர
 னனுதினந் தீமை புரி வோனெந்த நாளினு
  மடங்காத சண்டாளனும்
மையார் தடஞ்சோலை திகழ்கின்ற களமூரின்
  மணவாள நாராயணன்
 மனதினுறை யலர்மேலு மங்கை மணவாளனே
  வரதவேங் கடராயனே.    (சங)

இப்படிப்பட்டவன் இவ்வங்க வினனுவனெனல்.

காதவழி யானநதி மாதலந்தனியாத
  கயவனே மீன்மூடவன்
 கைதந்த வேலைவா சிக்கமாட்டாதவொரு
  சசடனே மிக்கக்குருடன்
நீதுபெற தன்களவு கண்டவர்க்குத்தாஞ்
  செப்பிலா தவனூமையாந்
 செயலான தன்மகதை யொன்றெனினுமறியாத
  செய்கையுடையோன்செவிடனும்
ஏதெனினு மொருபேர் விளங்காத தேகம
  தெடுக்குமவ னேகுரூபி
 யென்றெனினு முன்பாத தரிசனஞ் செய்யாத
  வீணனே பேனென்பார்
மாதுசத்தியபாமை தழுவுமணி மார்பனே
  மணவாளநாராயணன்

மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சச)

உலோபியர் வகை,

நசைபெற்ற வேதவே தியர்தமக் குதவா
னவின்ற லோபர்க்குநேயன்
நாற்கவி மொழிக்ககவி ராஜர்க்கு மொன்றேனு
நல்கிடான் கொஞ்சலோபி
இசைபெற்ற கீதமுறை செய்பாட கர்க்குமொன்
றீகிலான் பாதிலோபி
யியலான மட்டுரா சர்க்குமொன் றுதவிலா
னேற்றமுக் காலுலோபி
திசைபெற்ற விகடகவி ராசர்க்கு முதவிலான்
றீயமுழு லோபிநடனஞ்
செய்மாத ரபிநயங் கண்டுமொன் றுதவிலான்
சேர்பரம லோபிகண்டாய்
வசைபெற்ற லோபியர் தங்கள்கண் டீரலன்
மனவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மஙகைமணவாளனே
வரதவேங் கடராயனே, (சரு)

உலோபியர் வஞ்சப்புகழ்ச்சி,

கண்ட பகையாளிமுன் னின்றுபொரு தாமற்
களத்திற் புறங்கொடுப்பார்
கன்னமிடு கள்வருக் காடையும் பணிகளுநீ
காணுமலே கொடுப்பார்
சண்டமா ருதமென்ன வருகின்ற பகைவர்க
டமக்குமனை யுங்கொடுப்பார்
சவுக்கிட் டடிக்கின்ற மன்னர்க்கு வீட்டுத்
தனங்களெல் லாங்கொடுப்பார்
அண்டிவரு மெமதூதர் தாந்தான் கேட்குமுன்
னங்கமுறு முயிர்கொடுப்பா
ரவனிதனை யிப்படி கொடுக்கின்ற பேர்கடமை
யதிலோப ரென்பதென்னே

மண்டலமும் விண்டலமு முண்டகனி வாயனே
மணவாள நாராயணன்!
மணதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௪௬)

உலோபியர் குணமாறாமை,

தேன்கொண்ட தனியொன்றி னேலேழு கடலெலாந்
தித்திக்கவே செய்யினுஞ்
செய்யபூ மலரினால் வச்சிரந் தன்னைச்
சிறக்கவே பொடிசெய்யினும்
கான்கொண்ட மலையெலாங் கைக்கொண்ட வெண்
ணெயாற் கவினுற்ற மெழுகுசெயினுங்
கயவர்க்கு நீதியும பேடிக்கு வீரமுங்
கபடர்க்கு மெய்ஞ்ஞானமும்
ஊன்கொண்ட மூடர்க் கிரக்கமுந் தெளிவுற
உரைத்தநல மேசெய்யினு
மூமை செவி டன்குருடன் முத்தமிழ்படிக்கினு
மூலோபருக் கீவுவருமோ
வான்கொண்ட தேவர்மொழிமலர் கொண்டபாதனே
மணவாளநாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௪௭)

மககளிற் பதராவாரி வரெனல்,

கொண்டகடன் வட்டியுட னன்றுபோற் குணமாய்
கொடுத்து மகிழாதபதருங்
கூறுபிணைசாட்சிமுறி யுடன்மறித் தாலுங்
கொடா தொளிக்கின்றபதரும்
கண்டவுடனொருகோடி சொல்லிப்பி னென்றெனுங்
கருதிச்செ யாதபதருங்
காணவிட்டினிற பழிகூறியவரையெதிர்
கண்டுபுகழ் கின்றபதரும்

பண்டொருவர் செய்நன்றி தனையே மறந்துபின்
பழிசொல்லுகின்றபதரும்
பரமாத ராசையால் வசைகொண்ட பதரும்
பறந்தாமிக வுஞ்சிதறவே
மண்டிவரு சண்டப்ர சண்டமாருதமான
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (சஅ)

இக்குற்றமுடை யோர்க்கும் இதுசெயல்
வேண்டுமெனல்,

கதித்திடும் பகைவரென் றாலுமா பத்தினிற்
சண்டுதவி செய்யல்வேண்டும்
கல்வியறி யாதசபை யெனினும்ப்ர சங்கங்கள்
கவிராஜர் செய்யல்வேண்டும்
விதித்தமுழு மூடரென் றாலுந்தன் மைந்தற்கு
வித்தைகற் பித்தல்வேண்டும்
வெய்யசின மூர்க்கரென் றாலுநல் லோர்கண்டு
மேற்புத்தி சொல்லல்வேண்டும்
அதிர்ஷ்டமிலை யென்னினுஞ் சலியாமல் மிக்கதொழி
லதிலே முயற்சிவேண்டும்
மாசாத்தியம் தானகன ரோகமென் றாலுமோ
ஷவிஷதம் தீவர்கண்டாய்
வசிஷ்டரொடு வான்மீக முனிதுதி சரித்ரனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே, (சக)

இதினும் இது மிக்கதெனல்,

தினமுந் திரிந்துதனி யாகியே மிகசபொரு
ட்டேடியே வாழுமதிலுஞ்
செல்வமொடு தந்தைதாய் சுற்றமுங் கூடிச்
சிறந்துண்ட கூழதிகமாய்
தனதுமரி யாதையொடு பெருமையறியாதவோர்
தனமாரி பொழியுமதிலுஞ்

சமமான மேன்மை தெரிகின்றபெரி யோர்தந்த
தாம்பூல மேயதிகமாம்
கனமருவு பலபல மகாவித்தை சிலசில
கருத்தொடு படிக்குமதிலுங்
கருணைபெற வொருவித்தை யாயினுங் குறைவறக்
கற்கின்ற தேயதிகமாம்
மனிதர்சில ரிவையன்றி யவைதிக மென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௯௰)

இதினுமிது வென்றியெனல்,

மிக்கதுலி கண்டுளம் வெருண்டுகலை மானையே
வென்றுசய மாகுமதிலும்
வெஞ்சின மிகுந்துசவ ரும்புலி யுடன்பொருது
மெய்கொண்ட வடுவேசயம்
பக்குவமு திர்ந்தபே ரிளமாது கொங்கையிற்
பரிவுடன் சேருமதிலும்
பைம்பொன்மணி மாலைபுனை வாலரதி யூடலிற்
பாததா டனமேசயம்
தக்கதொரு கலவியறியாத முழுமூடர்
சந்தோஷ மாகுமதிலுந்
தமிழருமையறிகின்ற பெரியோர் பழித்தலின்
தனையதே சயமென்பர்காண்
மைக்குவளை செங்குவளை வாசமலர் களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௯௧)

இதுவிதனை வசப்படுத்துமெனல்,

சிந்தைதெளி கல்வியே லோகவசி யம்பத்தி
செய்வதே தெய்வவசியஞ்
செய்யுமரி யாதையே வித்வசன வசியமாஞ்
செல்வமுற வோர்கள்வசியம

எந்தவிதருக்கிரள நலசும்பணங்களோ
யிடையிலில்லாதாகிய
மெய்ப்பொருளது மவர்மன தறிந்துகட்டிக்காத்
திருப்பதே ராஜவசியம்
தந்தகன்மங்களே துஷ்டசன வசியமாக்
தானமே சீததிவசியஞ்
சாந்தகுண மயமாய் நடந்திடு மொழுக்கமே
சகலசன வசியமாகும்
மந்திரமெழுத்தெட்டு மேயுனது வசியமா
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (ரு௨)

இச்செய்கையோர் இச்சிறப்புப்பெயர்.

கொள்வரெனல்,

சரணென்றடைந்தவர் தமக்குவரு வினையெலாந்
தாங்குவோன் புருஷமேரு
தன்னுடைய செய்கைபோலவரையும்பார்க்கின்ற
தகைமையோன் றெய்வபுருஷன்
திரணமெனி னும்பிறர் பொருட் காசையிலாத
செய்கையோன் புருஷோத்தமன்
தீராத வினைவரினு மற்பரைப் பணியாத
தீரனே புருஷசிங்கம்
பொருவிலாத் தன்னைத்தா னென்னினுங்கண்டபடி
புகலுவோன் புருஷரத்நம்
போற்றுமவர் மனதிக் குறிப்பறிந் துதவுவோன்
புருஷநாயகமென்பர்காண்
மரபெலா மிப்படி புகழ்ந்தகுண சேகரன்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (ரு௩)

இச்செய்கையோர் இவ்வழிபெயர்
பெறுவரெனல்.

சற்றேனினு மொருகல்வி யறியாதசயவனே
தாக்குமுயிர் கொண்டமரமாக
தன்புத்தியன்றிபிறர் புத்தியால் வினைசெயுந்
தகைமையோ னேபதுமையாம
கொற்றவர்கள் பகையாற் றூரத்துண்டு திரிகுவோன்
கூகையுற வானபக்ஷி
கோபமது தந்தையே யன்றிமற் றோரையுங்
கோபிக்கு மவன்மிருகமாம்
கற்றபெரி யோரையெதிர் பணியாத மூடனே
கைகால்முளைத்த சிலையாம்
கண்டவர்க ளெல்லாம பழிக்கின்றகோலனே
சனதுஷ்ட ஜெந்துவெனபார
மற்றவர்க ணயமது கனவிலுங் காணாத
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே. (௬௪)

கல்விப்பொருட்சிறப்பு.

தெள்ளமுத மனையகல் விப்பொருள் படைத்திடிற்
றேசமெல் லாந்துதிக்குஞ்
செயத்தம்ப மானபுகழ் நிலைநிற்கு மிவையெலாஞ்
செம்பொன்மிகு செல்வமதுபோல்
வெள்ளமது கொளுமெனும் பயமிலலை கனலினால
வெப்பவரு சலனமிலலை
வேந்தர்கள் பறித்திடக் கூடாதுசோதரர்
விரும்பினும் சங்குறாது
கள்ளராற் றிருடவும் முடியாது வரவரக்
கனமலாற் குறைவுறாது
கருணைஞா னந்தழையு மாகையா லினையிதய
கமலத்தில வைப்பதெளிதாம்
வள்ளலென வருகின்ற மாடபூ சியரதிபன்
மணவாள நாராயணன்

மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (நரு)

உரைகொண்டு சொல்வரிசை சேர்ந்துபொரு ளின்ப
வகை யோசைபெற் றேமதுரமா
யுற்றநவ ரசமுடன் கற்பனை யலங்கார
முண்டாகியே கவிடமாய்
நிரைகொண்ட சீர்தளை விகற்பம் பொருந்திநன்
னீதியாய்க் கடைதுடிப்பாய்
நிறைகின்ற சபைதனி லுதாரணப் தாசிகில்
நின் றுபழு தென்றிடாமல்
திரைகொண்ட தன்கடலில் வருமமுத பாகமாய்த்
தேசப்ர சித்தியாகச்
செப்புமொரு கவிகொண்டு குலமெலாம் வந்தடி
செயினுமது நிசரா தகாண் [மை
வரைகொண்டு பொழியு மழை காத்தருளு மையனே
மணவாளநா ராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (நசா)

துர்ச்சீவினைப்பயன்.

திங்களுத யங்கண்டு மலரா திருப்பது
செழுங்கமல முற்றவினையே
தினகரனை யெதிர்கொண்டு முகைகொண்டு வாடுவ
சேதாமபல் செய்தவினையே [து
சொங்குலவு சண்பக சுகந்தமலர் கண்டுமருள்
கொண்டது சுரும்பின்வினையே
கொண்டன்மழை கண்டுளமெலிந்திட வருந்துவது
கோகிலஞ் செய்தவினையே
அங்கணுல கெங்கணு மகிழ்ந்தபெரியோர்களுக
கருளா திருந்துவிடினு
மவர்மீது குற்றமது சொல்வரோசேர்ந்தவ
ரதிஷ்டமென் பார்கள்கண்டாய்

வங்கியந் தருமிசை கனிந்தகனி வாயனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௫௭)

அரசர் கவிவாணர்க்குச் செய்யுமுபசாரம்,

போசனங் கந்தமலர் மாலைதாம் பூலம்
பொருந்துவஸ் திரபூஷணம்
பரிவொடு கவிகையுஞ் சிவிகைகரிவாத்தியம்
பூமிதனை தனதானியம்
தூரலவு துவசமெனும் வெகுமான சோடசந்
தூதரால் வரவழைத்தல்
தோன்றுமுன் னெழுதல்வந் தருள்கெனத் தழுவுத
லுதிக்கிட விருக்கையுதவல்
நேசவுரு மாணைகள் செய்தெழுதல் வழிவிடுத
னிறைபங்கி காரமேழாம்
நெறிகொண்ட புவிராசர் கவிராசர் பாற்செய்யு
நீதிமுறை யென்பர்கண்டாய்
வாசவன் பெருவிசய ருதவெனு நாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௫௮)

புல்லர் நல்லோர்குண மறியாரெனல்.

சந்தன வனந்தனி லிருந்துமதன் மணமதைச்
சற்றுமறி யார்கிராதர்
தாளங் குளிக்குமவ ரதன்வாலை யணியார்கள்
சங்குமணி தன்னையணிவார்
கந்தமலி தாமரை யடுத்துமண் டூகங்
கருஞ்சேறு தன்னைய ருந்துங்
காமருவு தேமாவின் மிசையிருந்தாலுமே மா
காகமது வேம்புறாகரும்
அந்தவகை போலநல் லோர்தமை யடுத்தே
யனேகநாட் பழகிவிடினும்

மற்பர் தாமறிகின்ற தறிவதல் லாமற்மற்
றவர்மகிமை யறிவார்களோ
வந்திடு கணந்தன்னி லவர்பெருமையறிகின்ற
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௫௬)

புலமைப்பாடும் புலவர்பயன் பெறுமை.

நாவினிற் சொல்லுநய முங்கண்டு வஞ்சகரை
நட்பென்று வருநேய நம்
நலமதன வென்னவெழில் கண்டுபேடன் றனை
நாடிவரு மடமாதரும
காவினி லுயர்ச்சியும் பசுமையுங் கண்டிலவு
காத்திருக் கின்றகிளியுங்
கானலைக் கண்டுபுன லென்னவே யாசையொடு
கருதியே யேகுமானம்
பூவினிற் பொலிவுமண முங்கண்டு கேதகை
பொருந்துதே னுடுமளியும்
புல்லர்தஞ் செல்வங்கள் கண்டிந்து தி செய்திடும்
புலவர்செய லொக்குமென்பார்
மாவினிற் குதிக்வேலா வாவெனுஞ் சளபுரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங்க டராயனே. (௫௭)

மேலோர்செயல் கீழோர்க்காகாமை.

எந்தவினை செய்தாலு முனிவோர்கள் மாதவ
மிசைந்தாற் பெருமைபெறுவா
ரிகழ்ந்தவகை சொல்லினுங் கவிராசர் வித்தையா
லென்றுமிகு மேன்மைபெறுவார்
சிந்தைமத பாவென் றெழுவினுநந் துரைகள்செந்
திருவினாற் புகழ்சிறப்பார்
சீரியர்க ளெப்படி புரிந்தாலுமேற்குமது
சிறுமையோர் செய்ய வசமோ

# திருவேங்கட சதகம்

அருகில்லையா காருணா நிதியொடு வீணையின்
றொனியினை தப்பிரமமாய்த்
துய்யதந் திரியோசை யிடைறாசையெனவேறு
தோன்றும வின்பமயமாய்த்
தருமதுர வமுதரச பொழிதருசரளிகள்முதல்
சங்கீத வித்தையென்றல
சகலர்க்கு மானந்தமாகமது பாடுமவன்
சரசகுண வஞ்சியெனினே
மருவியிசழ் பாகுசியனை யாமனுமி ருப்புமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கையண வாளனே
வரதவேங் கடாசயனே. (கங)

## பாதச் சிறப்பு

பாதாள முஞ்சுதி யடங்கமிரு தொனிசெயும்
பண்புபெறு வோன்மதனி
பாராக கீதமொடு தாளங்கொள் கனவிதம்
பாடுவோ னேபாடகன்
காதாள மேன்மனமுக ணயா தத்தின்மேற்
கண்ணுமுடை யோனட்டுவன்
கையின்மேல் விழியுமன் கைவிழியினலனயங்
காட்டுமவ னேபாத்திரம்
சுராதாள லயமார்க்க மாகுமிக கிதபதஞ்
சொல்லுமல ரேபரிசனந்
துதிபெற்ற நடனப்ர சங்கமதில் வேறுதொனி
தொனியாத சபையேசபை
வாதாள முடனாவி னடனமிடு பாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கையண வாளனே
வரதவேங் கடாசயனே. (கச)

## நாடகச் சிறப்பு

சுகந்தபரி மளவஸ்த்ர பூஷணாலங்கிருத
சோடுமஸ் தீபுவேண்டுந்

தோகையர்க ளும்பரி சனங்களுங் கூடியே
சொற்படி நடத்தல்வேண்டும்
மிருந்த ரஸ்தாளிக் கரும்புதேன் முதலான
மேன்மையோ டின்பரசமாம்
வேதாங்க வஸ்துமுஞ் சாதியும் பாஷையும்
வெவ்வே றிருத்தல்வேண்டும்
புகழ்ந்தபத மிங்கிதம்பரிகாச விகடங்கள்
புண்ணிய கதாப்ரசங்கம்
போற்றுபா வணர்மிகு ராகதா ளஞ்சுருதி
புகழ்கின்ற பரதநடனம்
மகிழ்ந்திடுஞ் சபைதேவர் சபையென்று சொல்வர்கா
மணவாள நாராயணன் [ண்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯௫)

விநோதவித்தைச் சிறப்பு

சத்திகண பதிதுர்க்கை சரஸ்வதி மாகாளி
சாமுண்டி யென்றுவாழ்த்திச்
சங்கமொடு ஜயகண்டி டக்கைகைத் தாளங்கள்
சத்தமொடு மிகமுழங்கச்
சித்ரமிகு மாத்திரைக் கோலின்முறை யங்கமுறை
செப்புமறை பத்துமுறைகள்
செய்யுமுறை யறுபத்து நாலுகஜ கரணங்கள்
சேர்ந்தகோ கரணமார்க்கம்
வித்தைபுரி ஸ்தம்பனம் தாதியா மஷ்டாங்க
விதமாம யேந்த்ரசாலம்
மிதுமந்த்ரசாலமுத லானசெப் பிடுவித்தை
மேன்மையவர் தந்த்ர நீதி
மத்தசக ராசதே வேந்த்ரனுந் தேவனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யவர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯௯)

## பௌராணிகர் முதலியோர் சிறப்பு.

ஆருக்குமானந்த மாகவேபொருள்சொல்லு
மவனே புராணிகனு
னங்கமொடு கோசதிலே கணிதமுந் தெரிந்தவோ
னருள்புரோகித பூசுரன்
சீருற்ற சபையெலா மெச்சப்ர சங்கமுறை
செப்புமவ னேவித்துவான்
செய்யுமந் திரயந்த்ர தந்த்ரமொடு
சிலனே மந்த்ர வாதி
ஏருற்ற கல்விகுண மேன்மைபோ தகனெ
னிசையுமவ னாசாரிய
னென்றுமவர் சொற்படி நடந்துபய பத்தியொ
டிருக்குமவ னேசிஷனமை
மாருக்கு வேதாந்த வாசனே நேசனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங்கட ராயனே.

## மருத்துவனியல்பு,

திரமான சாஸ்திர முணர்ந்தொரு சிகிச்சையது
செய்திட வழைத்தபின்போய்த்
தேசகா லஞ்சாதி தேகங் குணம்பிணி
சிறக்குமா றுந்தெளிந்து
காமான நாடிமுத லெட்டுப் பரிட்சையுங்
கண்டுகலி தங்கியாமுங்
கனகுளிகை பஸ்பமோ சிந்தூரஞ் சூரணங்
கருதுலேகியதயிலமாம்
பரமான நன்மருந்துங்கொடுத் துசிதமாய்ப்
பத்தியமு மெளிதாகவே
பரிவுபெற மாரோக்கியஞ்செய்து கிரளாசை
பகராத பண்டிதனெனின்
வரமான தன்வந் திரிக்குநிகர் சொல்வர்காண்
மணவாளநாராயணன்

மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங்கட ராயனே. (௯௫)

ஈனர் மருத்துவனுக்குச் செய்யுமுறைமை.

சேர்க்கின்ற கனரோக முற்றால் வயித்தியன்
றெய்வமாங் கேட்ட தெல்லாந்
தினங்கொடுப் போமென்பர் தீருமிப் பிணியென்
செப்பிறு லன்று குருவாம
பகர்க்கின்ற குளிகையது தந்தபின் தந்தையாம்
பாதிலகுவான பின்பு
பலபான துணைவனு ரோக்கியஞ் செய்தபின்
பகர்கின்ற மைத்துனனுமாம்
ஏக்கின்ற மற்றைநா ளையன்மறு நாளினி
லிளைசந்தகட ஞனிமறுநா
ளெதிர்வரிற் பகையாளி யாகுமிப் படியென்று
மீனர்சில ருண்டுகண்டாய்
வார்க்கின்ற தானமொடு வளர்கின்ற வள்ளலே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே, (௯௬)

ஆராயாதுசெய்யு மெழுவரடையுங்கதி,

நீதிவழு வாயவகை வழக்குரைப் போர்களு
நிறைந்ததீ வினைகளெல்லா
நீக்குபரி காரமுறை செய்குவோ ருப்பிணி
திறுத்தவருப் பண்டிதர்களும்
சோதிடஞ் சொல்லும்பு ரோகிதருமுலகந்
துதித்த செங்கோல்வேந்தரும்
தூயவுப தேசதே சிகருமவர் சீஷருஞ்
சொல்லுமிவ ரேழுபேரும்
ஆதிமறை நூலுரை செய்தவித மாராய்ந்
ததிந்துதெளி யாதுசெயிலோ
வடைக்கலப் பொருளைக் கவர்ந்திடும் பேரிலு
மகோரநர கடைவர்கண்டாய்

மாதிர நெடுங்கடல் வளர்ந்த நெடு மாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே, (௭௰)

நித்தியகருமச் சிறப்பு

கருணைநதி மூழ்கியே சந்தியாவந் தனமுடன்
கருதுஜப தபவோமமுங்
கடவுளோர் பூசையுஞ் செய்து வேதாகமங்
கல்வியது முறைபடித்துத்
தருமத் தியானநற் கருமமா நீதியொடு
தந்தைதாய் புத்திரருடன்
றுணைவு செய்தார மாயனைம்
சந்தியொடு கருமநண்ணி
பரிவுடன் றிருக் கோயில்வல மாகிப்
பணிந்துபத சேவைசெய்து
பணபான சந்த்ரோ தயத்தின்மல ரணைமீது
பாரியுடபண மகிழ்ந்து
மருவியே வாழுமில் வாழ்க்கையே வாழ்வுகாண
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௭௧)

குடிவாழ்க்கைச்சிறப்பு

மிக்கதெய் வத்தலமு ஞானகுரு பீடமும்
விளங்குமா நதியுமறை யோர்
மேவிய கிராமமும் பூமிநல முந்தனமு
மேலரசு முடையநாட்டில்
முக்கனி தருஞ்சோலை நீர்வளங் குடிவள
முயங்குபயிர் வளமுமுள தாய்
மொளிந்தநாற் குலமுஞ் செழிப்பதாய்த் தேர்வீதி
முதலாய் விளங்குமூரில்
தக்கதொரு வீதியொரு பாங்கிவி சாலமாய்ச்
சார்ந்த சிங்காரமனையிற்

றனதானி யங்கறவை முதலான செல்வந்
தழைத்தென்ன தானமுதவி
மக்கண் மரு மக்களொடு வாழ்வதே வாழ்வுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (எஉ)

மருத்துவர் செல்லத்தகாவிடங்கள்,

தீராத ரோகமுண் டோரிடமு முண்மையது
செப்பாத பொய்யரிடமுஞ்
சீரான வொருவர்பண் டிதமன்றி வெகுவிதஞ்
செய்துகொள் வோர்களிடமும்
வராத கோபமுறு மூர்க்கமன் னவரிடமு
மேற்றிமைப மனதுயிரியா
வின்பமக மதிவிரக மானகா முகரிடமு
மெப்படி நலஞ்செய்யினும்
தாராத லோபரிட மும்பத்தி யக்கனேத்
தாழ்வுசெய் வோர்களிடமுஞ்
சகலசன கண்டக ரெனுந்துஷ்ட ரிடமுமிரு
தனமாரி யேபொழியினும்
வாரா திருப்பதே பண்டிதர்க ணீதிகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (எ௩)

நோய்க்கிடங்கொடாதவர் செய்கை,

சனிபுதன் றனிலெண்ணெய் வெந்நீரின் மூழ்குவார்
சாருமிள வெயில்விரும்பார்
தம்வயதின் மேலான மங்கையைச் சேரார்
சதாகாலம் வழிநடவார்
பனியிலுங் காற்றிலும் மெய்வருந் தார்மடைப்
பள்ளியிற் சேவகமிரார்

# திருவேங்கட சதகம்,

பழங்சதி யருந்தா ரிரண்டடக் காரரொன்று
பலகால மூட்விட்டிடார்
சனியொடு கிழங்குகள் மிகுத்துபுசி யார்பசி
கலந்தன்றி புணர்வுசெய்யார்
சாய்ச்சுபா லுண்பார்நீ ரோர்கூட்டு வார்தினங்
காவேரி தனின்மூழ்குவார்
மனிதரிவர் பேர்சொன்ன பேர்க்கு நோய் சேருமே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே, (எச

தாதைமுதலியோராவார் இவரெனல்,

திலமுடன் டுருகமுஞ் செலவமுந் தந்துகட
கிலுவையொன் றில்லாமலே
நிறைகல்வியுரைசெய்து நெறியொடு வளர்க்கின்ற
நேசனே யுயர்தந்தையாம
கலைமதிய மெனவே வளர்ந்தபின் செல்வங்கள்
கண்டுமிக மனமகிழ்ந்து
கருதரிய புத்திரன்போலமரு மகளையுங்
கருணைசெய் பவளன்னையாம்
பலகலை யுணர்ந்துமிகு செல்வமுந் தேடிப்
பகிர்ந்துதன் பேர்விளங்கப்
பண்பான தந்தைதாய்க் குதவியே யவர்சொன்ன
படிசெய்கு வோன்புத்ரனும்
பலர்பொழி செழுஞ்சோலை மலைவலரு மாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாராயனே, (எரு)

நற்புதல்வ னியல்பு,

அரிதான மாதவஞ் செய்கின்ற முனிவோ
ரடைந்திடுவ ரந்தனைப்போ

லடுத்தவர் தமைக்காத்த மிக்கமே லவாதமை
யடக்குமுன் சக்கரம்போல
பெரியோ ரிருக்கின்ற சபையினிற் கவிராஜர்
பேசும்ப்ர சங்கமதுபோல்
பேருலகை மெய்க்கொடு மனுநீதி முடிவேந்தர்
பெறுகின்ற மாகீர்த்திபோல்
ஒருகோடி நட்சத்திரங்களுடனடுவே
யுதிக்கு சந்த்ரோதயம்போ
லுயகுல சுத்தனும் பவித்ரன்போலவே
பொருவில்லை போதுமலனுல்
மாமெலா நன்மையே யடையுமென் பார்கள்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௭௮)

சகோதரவொருமை

தனதுபட் டந்தனைத் தம்பியர்க் கீயெனத்
தந்துமகி ழுந்தமையனுந்
தமையனூர் வருமளவு மாவிரத மாகவே
தபசுபுரியுந்தம்பியும்
கனதனைப் பாலித்த தாய்தனைப்போலவே
கருணைசெய திடுமதனியுங்
காணுமுன் றந்தைபோற் றிருவடிகள் பணியுங்
கனிட்டனிட மனையாட்டியும்
தினந்தினம் பரிவாகியம்மையே யென்றுபேர்
செப்புங்கொழுந்தனுந்
சேர்ந்துவாழ் கின்றபேர் திரேதாயுகந்தனிற்
றசரதர் குமாரர்கண்டாய்
வனசமலர் கமழ்கின்ற வாவிசூழ் களபீரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௭ )

### வேட்டகத்தியல்பு.

காரிகை தனைத்தந்த மாமனார் மனைதனிற்
கருதிமரு மகன்வந்திடிற்
கண்டவுட னாசார வுபசாரமாகாவ
கனவிருந் துகள்சமைப்பார்
சேருநாண் மூன்றுகி மைபட் சத்திர்
செனித்தசந் த்ரோதயம்போற்
றினந்தினம் பெருமைகுறை யுங்காரி யங்களூடி
செய்யென்ப ரத்தைமுதலோர்
ஆருமென் ணார்கண்மைத் துனர்சரச பரிகாச
மதிகமா மனைவியெனிலோ
வன்புடன் சொன்னபடி கேளாளி தாகையா
லாதியொரு கதையல்லவோ
வாருமென் றவரோக வசனமுஞ் சொல்வர்காண்
மனைவாள நாராயணன்
மனதிலுறை பவர்மேரு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௭௮)

### மானங்கெட்டுப் பிழைப்பவரிய றெலை.

கேசமுறு சிறுமிதனை நறவினன் மருகன்மனை
நிலையென்று வாழ்ந்தபேரும்
நேரிழை தனைத்தந்த மாமனார் மனைதன்னி
னீங்கா திருந்தபேரும்
பேரிய கல்விதெரி யாமூடர் பேரிற்ப்ர
பந்தகவி சொன்னபேரும்
பெருமைபோய்க் கள்ளக் கடன்களேபட்டுப்
பிழைத்துயிர் சுமந்தபேரும்
ஏசவரு பகையாளர் தங்கண்முன் கைகட்டி
யேவல்செய கின்றபேரு
மீனமது பார்ப்பரோ வயிறுசா ணன்றிவர்க்
கெண்சாணு வயிறுகண்டாய்

வாசமலர் மங்கைகுடி கொண்டுவளர்களமூரின்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௭௯)

கற்புடைப்பெண்டீரியல்பு.

ஓதுஜப பூசைகட் கினியநற் றேவல்க
ளுகந்துசெய் போதுதாதா
முறைகொண்ட சரசஞ்செய் போதுமன்மதனு
மொழிந்தவே ளைத்தெய்வமாம்
நாதனைக் கருதியவ னுண்டநுறை யமுதாக
நவில்வதே யுபதேசமாம்
நதியாடல் பலநோன்பு தேவதா தரிசனை
நயந்தபலவிரதமுமவன்
பாதசரி சனமாக்கொள் சத்தியாய்ப் புத்தியாய்ப்
பத்தியாய்க் கடலினூழும்
பாரென்று கணவினுறை செய்தினுஞ் செய்கின்ற
பதிவிரத மார்க்கமான
மாதர்புகழ் நீதியே நதிபெற்று நல்லவோ
மணவாளநாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௮௦)

நற்பெண்டீரியல்பு.

பஞ்சணையி னருகாக நின்றுவா வென்றபின்
பரிவினுட னருகில்வந்து
பாக்கிலை மடித்தசுரு ளீந்துமெத்தையிலவந்து
பரிமள மிகத்திமிர்ந்து
கொஞ்சியலர் சூடியிசை பாடிவிளை யாடியே
கொக்கோக விதமறிந்து
கூடியித மிருவோரு முறைபருகி யினியபுட்
குரலோசை மிகமுழங்க

நெஞ்சமகிழ் வொடுசூத சரணகிரி காவுபரி
மேயாதி கேளிதன்னில
நிறையமிர்த போகசம் போகவை போகமுட
னீங்காத யோகமுதவும்
வஞ்சியின லாருமனைம வேறென்றின் மகிழுமோ
மணவாள நாராயணன்
மனைநிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௧)

தீப்பெண்டிரியல்பு.

ஐயருங் கழுதுபடை யென்றவர் தாய்பேயு
மாண்பிள்ளை யென்றென்னவோ
வரிசியென் பேயாலை சட்டியெனமேயென்ப
ளவள்சொன்ன வகைகளெல்லாம்
பையவே சொண்டிவந் தானுஞ் சமைக்கப்
படாததலே நேராகுதென்று
பாயிற்கிடப்பன்னை மாயொன்று பேசினுல
பாருனைக் கேற்றபுத்தி
செய்ய வல்லேனென்பள் சற்றுடித் தானஞ்சு
தின்கிறேன் கூ கூவெனத்
தெருவீடு தோறுமோடி யிடுபெண்டி ருண்டெனிற்
றீயநமன் வேறுமுண்டோ
வையகம் புகழ்சோலை மலையலங் காரனே
மணவாளநாராயணன
மனைநிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௨)

பரத்தையரியல்பு.

கொச்சியுறு மஞ்சள்வங் காளமுறு பச்சைசினைவ
கூறுசண் பகமொட்டுடன்
கூடிய நலங்குவஞ் சனமாடி பொற்கண்டை
கொண்டவெண் டுகிலுடுத்துக்
கச்சிளங் கொங்கைமேற் கந்தபரி மளகளப
கஸ்தூரி குமுகுமென்னக்

கனகநவ ரத்னமய பூஷணம் பூண்டுகிளி
கையின்மிசை யேந்திநலமாய்ப்
பச்சைமயில் போலிருந் தேனைக்கு மிருசரச
பரியாச நகைபுரிந்து
பணபான மேடையுப் பரிகையினிற்கும்
பாத்தையுண் டாவலென்றால்
வச்சிர நூலகத்த ரம்பையினு மதிகமா
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௫)

பிரௌடை வேசையியல்பு.

ஆசையுட னொருவிக்கே புருஷன்வந் தாலுமிகவு
மாசார வுபசாரமா
யாசனந் தனிலெழுந் தருளுமென் றருகிருந்
தழகான வொரு தட்டிலே
நேசமொடு தாம்பூல முதலியே யவனுடைய
நெறிகண்டு வாவழைத்து
நீரிய யந்தநாள் வந்தீர் பின்னெனை
நினைத்திலீ ரென்கோவென்று
பேசரிய சங்கீத சரசசல் லாபப்ர
சங்கமொடு ரதிகேளியில
பிரியமுட னேயனைத் தின்பமா யுசிதம
பெற்றிப்ரௌடை வேசையென்பார்
சயிருபைந் துளப மாலையணி மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௬)

பாத்தையரிழிவு.

விலைமாதர் வீடுசவு ளிக்கடை படுக்கையது
மேருமலை பொதுவம்பலம்
மெத்தையது சந்தியிற் பாறையவ ரங்கமோ
மேவிய படித்துறையதாம்

கலைமருவு மரைகைதோ லாடைமா மிருகொம்மைக
கடையிலெனு மிசைமயமுற
கனிவாய் பழுதாமிரு துடைகடனனி யபபங்கல
கட்புகத லிங்கமயமாம
முலைமாபு வாடனைக் குதிரிலைபிடை யேனரியமார
மோகமென் வெட்டிக்கனி
மொழிபுயற் சொமபுசே ரிணடியெவத் தொரமை
முறைமையிலை கண்டிருந்தும
மலைவுபெறு வார்களவர் வார்த்தைகத் தேயரோ
மணவாள நாராயணனை
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௰)

சரீரநிலையாமை.

ஆகாய மீதினி லெழுதுசிலை காற்றினை
யடைத்துவைத் திடுதுருத்தி
யனலிட்ட மெழுகுவெயி லிடையிட்ட வெண்
ணெய்சுழி யாற்றிடை மெழுக்குமிழி
மோகா விகாரமொடு வருகின்ற மின்னல்விழி
மூடுதுயில கண்டகனவு
மோதிவரு காற்றினிற் றீவிழுந் திடுபஞ்சு
மூச்சோடு நின்றபதுமை
மீகாமனில்லாத கப்பலகண் ணிமைபோல்
விளங்கவரு தேகமிதனை
மெய்யென்று மெய்யெலாம் பொய்யென் றுதிரிகின
விழலனென யாளதினைவாய்
மாகாள முகிலனைய மெய்யனே துய்யனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௧)

நலவினைசெய்வோர்பேறு.

ஓதுமா தாபிதா குருதெய்வ விசுவாச
முடனதிதிபூசைசெய்வோர

றாற்பர தாரசோ தரமாகு வோரகித
மொருவர்க்கு மெண்ணிலாதோர்
பூதய வுன்னோர்சகாயமே புரிகுவார்
பொய்யிலா வாய்மையுடையோர்
பூர்வமாம் தருமபரி பாலனம் பண்ணுவோர்
பூஞ்சோலை நந்தவனமே
பாதையிடை மண்டபங் கூடந் தடாகநீர்ப்
பந்தர்முத லாய்ப்புரிகுவோர்
பண்பா யிவர்க்குமலை போல்வந்த வினையெலாம்
பனிபோல நீங்கிநலமாய்
மாதவ முகுந்தனுன் பாதமே பெறுவர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௭)

## மாதர் அவயவமயக்கு.

சிக்குமிக வேநாறு கின்றகுழன் முகிலென்பார்
திரளுத்தை மாருதவாய்
செம்பவள மென்பர்சளி கொண்டுநீர் மாறாது
பறநாசி குமிழதென்பர்
பக்குவம தன்றிவிழு கின்றமுலை யானைகோற்
பையமக மேருவென்பர்
பாராத நரகத் தவாரமாங் குழிதனைப்
பகரின்ப வாரியென்பார்
மிக்குவரு ரத்தமுஞ் சீயுமென் புமபோர்த்த
மேனிமலர் மாலையென்பா
மீளாத நரகந் தருஞ்சிறிய வின்பமதை
பேரின்ப வீடென்பரிம்
மைக்கருங் கடலினிடை வீழாம லாளுவாய்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௮௮)

நீதியின் பெருமை.

வித்தையே செய்திடுங் குருபீட மொன்னலரை
வென் றுவரு கின்றதனைவாய்
மித்திரர்கள் பகைவரா மேவலாக வேணயார
விந்தைபுரி தானுபதி
புத்திநல மேசொல்லு மதிமந்திரி யாவரும்
புகழ்கின்ற வசியகுளிகை
புளகமுலை மாதருக் கதிரூப வின்பந்
பொருந்தவரு காமதேனு
நித்தலும் பெருமையே செயுமரசு தான்மொழிய
நிலைசெயத் தக்கசூத்ரம்
நேர்ந்தநீதி யென்கின்ற வாதங்க கேசரி
நினைத்தவெல் லாங்கொணர்ந்தே
வைத்திடுங் குலதெய்வ நீதியன் றிவேறேது
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலுமங்கைமணவாளனே
வரதவேங் கடேசனே, (அகூ)

உயர்ந்த பொருளிருக்கு மிடத்து இழிந்த
பொருளிருக்கு மெனல்.

கோகனக மலர்மலந் துறுகின்ற வாவியிற்
கொட்டியு மலர்ந்திருக்குங்
கோகிலந் தொனிசெயுந் தேமா வனந்தனிற்
கூறுவாய்ப் பக்ஷியுறையும்
ஏகமென வுலகம் புரந்தமன் னவர்சபையி
லீனமன் னருமேவுவார்
நிலகுமா ணிக்கங்கள் விற்கின்ற கடைவீதி
யிற்பாலை மணியும்விற்பார்
பாகனைய மதுரரச லளிதப்ர பந்தகவி
பாடுமன் னவர்கள்சபையில்
பழங்காடி தனிலும் புளித்தபுன் கவிசொலும்
பாவலரு முண்டுகண்டாய்

மாகனக முறையுமொரு மணியணியு மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே. (௯௰)

சேர்ந்தவினத்தின் குணம்பெறுவோர்.

பெறுதோ ரிவரெனல்.

சோதிநவரத்னமணி மாலையிடைநூலுந்
துலக்குமணி யாய்விளங்குஞ்
சுரைப்பழந் தனுடன் சேர்ந்தசெம் பொன்னுந்
துரும்புபோ லேமிதக்கும்
வீதிபெறு குப்பையி லிருந்தாலு மாணிக்க
மெய்ம்மழுங காதொளிவிடும்
மிகவுஞ் செழுந்தேன் சொரிந்தே வளர்க்கினும்
வெள்ளுள்ளி நாற்றமாறா
தாதலாற் சேர்ந்திடு மினங்களைப் போலவே
பவனியி லிருப்பர்சிலபே
ரார்சொல் விஜூந்தங்கள் சுயகுணம்விடாமலே
யமைவற்று வாழ்வர் சிலபேர்
மாதர்துகில கொண்டொரு குருந்தேறு மாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடாராயனே, (௯௧)

வல்லோர்க்கும் புல்லோரால் தாழ்வுவருமெனல்.

பாராசர் வச்ரமகுட ந்தகர்த்திடுசத்தி
பஞ்சுமெத்தைக்கு நாளும்
பணிராசர் மணிமுடிகள் சிதறநட மிடுதோகை
பச்சோந்தி யானடுங்கும்
காராச மார்த்தாண்ட சந்திரகிரணங்களொரு
கட்செவியி னன்மறைபடுங்
கனைதபுரி விகடதட மத்தமாதங்கமொரு
கனல்சிறிது கண்டுபயமாம

அரராச கங்காப்ர வாகநிக ரூற்றுமொரு
துய்யசிலை யான்மறிபடுஞ்
சொலகின்ற பெரியோர்க ளொன்றனு மற்பராந்
ரேல்விகொடு முறிவர்கலன்டாய்
வரராச தசரத மகாராஜ புத்ரனே
மணவாள நாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௯௨)

நல்லோர்புகழ்நிலை பேறு.

விசயன்மனு வுடனிட்சு வாகுகுச நாபன்
விகுட்சிரகு காகுஸ்தனும்
மிகுமம்மரீஷன்மாந் தாதன்முசு குந்தன்
விசாலனே திரணபிந்து
சசிபிந்து வொடுதிலீ பன்னரிச் சந்திரன்
சர்வதா மன்பரதனே
சந்தனு நளன்சத்ய விரதன்ப கீரதன்
சகரனொடு தானகர்னன்
தெசரதன் புரூரவன் சென்னியே
திரிசங்கு வுடன்யயாதி
சித்திரசேனன்வீர சேனன்ருது பனனிந்திர
சேனன்விதூ ரன்பாண்டவர்
வசிதேவ னாதியோர் புகழுன்றி நின்றநிலை
மணவாள நாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௯௩)

தீயோர் பழிநிலைபேறு.

சூரனொடு பானுகோ பன்றிரி புரத்தினோர்
தாரகனே மதுகைடவர்
அந்தமகிடாசுரன் சப்பர சலந்தரர்
தூஷணன் றிரிசிரகரர்

விராத வணகும்ப கர்ணரிந் திரசித்து
மிகுகனக னிரணியாட்சன்
வெய்யவா தாபிவில் லவனுடன் சூர்ப்பநகை
மேவுமச முகிதாடகை
தாருலவு சிசுபால தந்தவக் கிரர்சர
சந்தனொ டடல்கீசகன்
சகுனி துரியோதனன் கஞ்சன்முத லாயினோர்
தங்களப கீர்த்தியல்லால்
வாரிசூழ் புவியிலவர் கொடுமைநிலைநின் றதோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯௪

வானப்பிரஸ்தன் முதலானோரியல்பு,

ஒருபொழுது மவமே பிராமணற் கருமங்க
ளுணர்வுடன் செய்துமனையா
ளொடுகாம மின்றியுன் பாதங்கள் போற்றிவன
முறைபவன் வானப்பிரஸ்தன்
கருமமுட னனுபக வற்கீதை துதிசெய்து
காமமுத லாறுமொன்றுங்
கருதாம லொருபோது சுவைநீக்கியேயுண்ட
கருணையோன் சந்நியாசி
இருவினையு மவைசெய்த துஞ்செயச் செய்வது
மின்பமுங் கனதுன்பமு
மெண்ணரிய சாதிமர புப்பலவு முன்செய்கை
யென்றெண்ணி யடிகடொழுது
வருமவனே யமனுற மெய்ஞ்ஞானி யென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯௫)

உத்தமர் முதலானோரியல்பு

வினையாட னன்னமுஞ் சுகமுமே ஷமுமென்ன
வித்தைபுரை தன்னையறிவார்
மிருகாழை சற்பகங் கன்னன்மலர் போன்மரபு
விதமாய் விளங்கவருவார்
பனையினொடு நாளிகேரங்கமுக மென்னவே
பரிந்தவர்க் கன்புகூர்வார்
பனசமுஞ் சூதமும் பாடலமு மென்னவே
பண்பினுட னுதவிசெய்வார்
சினமாதவி னீரெழுத் தொடுமண லெழுத்துடன்
சிலையெழுத் தெனமாறுவார்
செப்புமிவர் தமையாதி யந்தமாப் பார்க்கவே
சிந்தைதனி லாய்ந்து புவிமேல்
மனிதருத் தமர்கண்மத் திமரதமர் மூவர்காண்
மணவாளநாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௯௪)

தேசங்களின் பெயர்கள்,

அங்கயத் திமாள வஞ்சாள வங்கேக
யாரியம் பாரசீக
மாந்திரம ராடமே கன்னட மிடங்கண
மவந்தியொடு சேதிகுருதம்
கங்கைதிகழ் காஸ்மீர மச்சங் கிராடங்
கரூசமே சூரசேனங்
கலிங்கமொடு வங்காள நேபாளசிங்களங்
கனத்ததுளு வங்கேரளம்
கொங்கணம் போடந்திரி கர்த்தப்புளிந்தங்
குளிந்தகை கிராடமகதங்
கூர்ச்சரம் பப்பரம்வி தற்பகாம்போஜநற்
கோசலஞ் சிந்துகௌடம்

வங்கமும பணிகின்ற கருடகிரி வாசனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௬௭)

தேசமுதல் அண்டமளவாக நிற்குநிலை,

ஒட்டமுறு சாதகஞ் சவ்வீரபாஞ் சால
மோங்குகிட தங்கடார
முகந்தரஞ் சோனகஞ் சீனகாந் தாரமோ
டுலாவுமலை யாளவங்கம்
இட்டமுறு த்ராவிடஞ் சோளபாண்டியமாதி
யெண்ணேழு தேசமாகி
யிலங்குபர தக்கண்டமா திகவ கண்டங்க
ளேய்ந்தசம் புத்தீவுமே
அட்டதிசை பெற்றதீ வேழுபூ லோகமிரு
தாதிமே லேழுலோக
மதலமே யாகிகீ ரேழுலோகங்களிவை
யவையுமீ தோரண்டமாம்
மட்டிலா வண்டங்களுன்றிரு வயிற்றினுறு
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௬௮)

பதினெண் கணங்களிவை யெனல்,

தேவருடனசுரர்கள் சித்தர்க டயித்தியர்
சிறந்திடும் புருடர்கருடர்
செய்யகந் தருவர்கின் னரரிராக் கதர்பூதர்
தீதிலவே தாளர்முனிவோர்
மேவுவிஞ் சையராருக ரந்தா ரியக்கரோ
மேலுமா காச வாசர்
மிகுபோக பூமியோர் முதலாய பதினெட்டு
விதமான கணநாதரும

பூவையர்க ளுங்கண்டு துதிசெய்யுந்திருமலை
புகழ்ந்துகோ னேரிமூழ்கிப்
போற்றியுன் சந்நிதி வணங்கியே துதியாத
புன் சனன மூஞ்சனனமோ
மாவலி பணிந்தசெம் மணிமகுட பாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங் கடராயனே. (௯௯)

பரமபாகவத ராவாரிவரென்றல,

சுகனொடு வியாசன் பராசனொடு சவுனகன்
றுய்யநா ரதன்வசிட்டன்
துங்கவான் மீகிமா வலிருக்குமாங்கதன்
சுக்ரீவன் மாருதி
தருமிடசு வாகுவீ டுமனுடன் பிரகலா
தனன்குசே லன்விஜயனே
தருமனொடு முசுகுந்த னக்குரூரன்மணி
ஜடாயுவுட னம்பரீஷன்
அகலிதிரி சடைமாது பாஞ்சாலி சபரிமூ
னழைத்திடக் கஜராஜனே
யாதிராமாநுஜன் றிருவரங் கத்தமுத
ராழ்வார்கள் பன்னிருவரும்
மகிமைபெறுமுன்றொண்டர் பாதமே துணைகொள்ளு
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௱)

அடியார்க்கு வருஞ்சிறப்பு.

உனதுபா தம்போற்று மடியார்கள் சிந்தையி
லுவந்துநீ யென்றுமுறலா
லுன்னுடைய திருமாத ரென்மருஞ் சேர்வரவ
ருற்றதா னிதிகள்சேரும்

# திருவேங்கட சதகம்,

கனநிதிகள் சேர்ந்திடத் தனதன்வரு வானுடன்
கருணைபுரி நேயன்வருவான்
காதல னடுத்தகதா ளுமைவருவ ளன்னையாற்
கந்தன்வரு வன்மருகனால்
தனதுமா மன்வருவ னரசன்வர லாலமரர்
சகலருங் கண்டுவருவார்
தருமஞ் செழிக்குமருள் சேருமதுவன்றியே
தவமொன்று செயல்வேண்டுமோ
வனசரோ ருகமலர் மடந்தைவளர் களமாரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே. (௱௧)

---

அவையடக்கமும் பிரார்த்தனையும்,

ஒருமலை யெடுத்துமழை காத்தவா மனைதேவ
ருபயபத சேவைதனையே
யுளங்கொண்டு வெண்மணியில் வாழுமுத் தாரைய
னுத்தமநா ரணபாரதி
பொருமலை பொருங்கல்லை யுங்காளியாறும
பொருந்துகடல் பொற்புலவர்கள்
புகழ்சபையி லெனதுவேங் கடசதக மிதெனறு
புகலுரு நூறுகவியும
பரிவினுட னவைவருக கேட்டியன் றமிழின்மேற்
பக்ஷமவைத் தாளவருவாய்
பாலகன் புனசொலைக் கேட்டுமே மகிழுமவள்
பாரமீதி லன்னையலவோ
வருபவர் களிகனல் வாழுமுத வுநேயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே, (௱உ)

திருவேங்கடசதகம்-முற்றிற்று,